உ

பராபரம் துணை.

# அகஸ்தியர் திருவாய் மலர்ந்தருளிய

# பன்னிருகாண்ட வைத்தியம் 200.

## முதலாவது வைத்திய காண்டம் - 16

ஆடினதோர் மூல கணபதியைப் போற்றி
ஆதியென்ற சொற் சூஸ்திரம் பதிநூறாக
பாடினேன் பூரணம் பன்னிரு நூலுக்கு
பரிவான சூஸ்திரமாய் ரத்தினம்போல்
தேடியே பன்னிரண்டு காண்டம் காண்டம்
சிராகப்யாடியபிதா ரின்னூலப்பா
நாடியே யுலகோர்க்காய்ச்சொன்ன வாக்யம்
நன்றான மூலகணபதி காப்பாமே- (1)

மூலமுத லடிமுடியும் நடுவரையு மப்பா
முத்தாக உகந்ததொரு சாயுட்சந்தான்
மூல முதலென்றதுதான் மால் தேவியாகும்
முடியுமுத லடிமுடியுந் தருக வீரம்
ஞாலமுதல் நடுவணையுங் கெவுரி லிங்கம்
நலமான சாயுட்சயம் வெள்ளையாகும்
பாலமுதம் வேதைதனை அய்யா அய்யா
பார்த்தறிந்து கைபாக மாகச்செய்யே (2)

செய்யப்பா ஏகமூலிகையைமுன்னே
செயமாகச் செய்து கொண்டு தருசிற்போடு
வையப்பா தருசுடனே வீரஞ்சேரு
வகையாக கரிசாலைச் சாற்றிற் போடு
மெய்யப்பா குகைதனிலே சூதம்விட்டு
வேண்டியே குருபோடு மணிபோலாடும்
செய்யப்பா இதன்விபரம் நூற்றுக்குள்ளே
திறமாகச் சொல்லி விட்டேன் தெளிந்துபாரே (3)

பாருநீ மால்தேவி களங்கு தன்னைப்
பாடிவிட்டேன் வைத்தியம் ஐம்பதுனுக்குள்ளே
காருநீ களங்குதனை வெள்ளி செம்பில்
கட்டாகக் கொடுத்திடவே கடைக்கியேறும்
விருடனே சொல்லுகிறேன் நூற்றுக்குள்ளே
விபரமாய்ச் சொல்லிவிட்டேன் முன் பின்னாக
சாரேநீ சாரணைதான் துருசு வீரம்
சார்வாக மால்தேவி களங்குமாச்சே (4)

ஆச்சென்று சொல்லாதே யின்னுங்கேளு
அடைவான கெவுரி லிங்கம் கருவங்கந்தான்
பாச்சென்ற நூற்றுக்குள் விபரமாகப்
பாடிவிட்டேன் சத்திமுதல் கட்டுஞ்சொன்னேன்
நேச்சென்ற செயநீரு சருக்காய்ச் சொன்னேன்
சுகமாக உட்கருவின் போக்குஞ் சொன்னேன்
காட்சென்று பாராதே குருமுடித்துப்பாரு
நன்றான குருவறிந்து நான் சொன்னேனே (5)

சொன்னதொரு கேசரியின் சூஸ்திரந்தான்
சொல்லி விட்டேன் நூற்றுக்குள் நன்றாய்ப்பாரு
வன்னமுள்ள வீரமுடன் வெள்ளை சேர்த்து
வாகாகக் களங்கமதாய்ச் செய்து கொண்டு
பன்னமுள்ள களங்குதனைச் செம்பி லிட்டால்
பாங்காகு மதுவயது இருபத்தைந்தாம்
சொன்னதுவும் பொய்யல்ல மெய்தானப்பா
சூஸ்திரத்தின் படிசெய்தால் மெய்யதாமே (6)

மெய்யதாய்க் கைபாகஞ் செய்பாகங்கள்
விடாமலே செய்தவர்க்கு மெய்யதாகும்
பொய்யதாங் கைபாகஞ் செய்பாகங்கள்
போக்கிவிட்ட பேய்களுக்குப் பொய்யதாகும்
மெய்யதாங் கைபாக செய் பாகங்கள்
விபரமது சொல்லுகிறே னுகந்துகேளு
[illegible]பதாம் நித்தியகர்ம முடிந்ததானால்
வெளியில்லே வேணதபது கைக்குள்ளாமே (7)

ஆமப்பா சரியாக மந்தான் நியாசம்
அடைவாகச் சித்தாந்த பீஜங்கொண்டு
வேமப்பா செய்துவா உதவியாகும்
வேறொன்றைச் செய்தாக்கா லுறுதியில்லை
நாமப்பா வெட்ட வெளியாகச் சொன்னேன்
நலமான சூஸ்திரமது அஞ்சிற்றாறும்
காமப்பா லாசைகொண்டால் வாதம்போச்சு
கட்டாக பீஜமது அஞ்சில்காணே (8)

அஞ்சிலேதான் வைபாகக் குருவுஞ் சொன்னேன்
ஆறிலுந்தான் முடிவாகப் பாடிப்போட்டேன்
நெஞ்சிலே படும்படியாய்க் குருமுடிப்பு
கோரக நூற்றிலே விபரஞ் சொன்னேன்
விஞ்சிலே நலக்குருவா மேகமூலி
விருன வயித்தியமைம் பதிலே சொன்னேன்
நஞ்சு கொண்டு செத்தவன்போல் சாக்கெல்லாஞ்சாம்
நாதாக்களுக் குரைத்த குருவிதமே (9)

குருவாக முதற்குருவை வழிகாய்ச்செய்து
கொடுத்து வந்த பேர்களுக்கு வேதைகாணும்
மருவியே போகத்தி லிருந்த பேர்க்கு
வழிதுறைக ளறியார்கள் மடையரப்பா
கருவாக நவச்சாரங் கரியுப்புந்தான்
கட்டாக நூற்றிலேதான் கருவைச் சொன்னேன்
அறிவாகச் செய்தவற்கு குருவேயாகும்;
ஐம்பதிலே முப்பூவை முடிக்கச் சொன்னேன் (10)

சொன்ன தொரு ஐங்கோலத் தைலஞ் சொன்னேன்
சுகமாக அறிந்தவர்க்கு முப்பூவாகும்
வன்னமுள்ள வாதமாம் வேதைகாணும்
மாத்தாகும் பசும்பொன்னு மேனியெல்லாம்
வன்னமுடன் கனக மிகுஞ் செல்வமாகும்
காசினியில் நீயு மொரு சித்தனாவாய்
நன்னயமா யின்னூலைக் கொடாதே நீதான்
நாயென்ற கெருவம் வைத்தாற் நாயில்வீழ்வாய் (11)

விழுகாதே யொருவருக்கும் நூல்கொடாதே
வேதாந்த ஞானியென்று லிவாயப்பா
பழுவாகு மிந்தநூல் துறை காண்பிக்கும்
பாடினேன் பதினாறுச் சருக்கிக் கொண்டு
கழுவாதே யிந்தநூல் விட்டிடாதே
நன்றான குருமுடிப்புச்சுண்ணம் நூறு
எளிதாக வயித்திய மைம்பதுக்குந் தானே
இந்தநூல் கருக்குருவாய்ப் பாடினேனே (12)

பாடினேன் ஐம்பதிலே முதற்குருவையப்பா
பகர்ந்திட்டேன் கருமறைப்பில்லாமற் சொல்லி
ஆடினேன் சர்வத்தால் குருசூட்சத்தை
அடிமுடியுங் கடுவரையி லமர்ந்திட்டேனான்
தேடினேன் ஏகமூலிகையைக் காணச்
செப்பினே னாத்தாளும் தெளிந்துகொண்டு
நாடினேன் பொதிகை மகாமேரிற் சென்றேன்
நாதர்க்கள் கடாட்சத்தால் தேடினேனே (13)

ஏகமூலிகை.

தேடினேன் ஏகமூலிகையின் திட்டம்
திறமான பூச்சுண்ணம் அஞ்சதாகும்
தேடினேன் பாஷாணம் பதினொன்றுந் தான்
திடமான பூக்கண்ட யிடைக்குச் சேர்த்து
ஆடியே வில்லைதட்டிக் காயப்போடு
அதன்பின்பு மணலிவிட்டு பெரிசாமந்தான்
சூடினேன் செந்தூரங் குப்பிக்கேற்றிச்
சருக்காகும் ஐம்பதிலே வகைகையக்காணே (14)

காணப்பா ஐம்பதிலே அடிமுடியின் விபரம்
கட்டாக கடுவரையும் நூற்றுக் குள்ளே
பூணப்பா தைலங்கள் ஜீவிச்சாறு
புகழாகச் சருக்கிடவே யெல்லாந்தேரும்
தோணப்பா செந்தூரங் குன்றி கூட்டிச்
சருத்திடவே சாக்கெல்லா மணிபோலாடும்
காணப்பா அம்புபோல் வேலைபாயும்
நன்றாகக் குருமுடிப்பு நூற்றிற்காணே (15)

காணேதான்குருமுடிப்பு நூற்றிற் சொன்னேன்
கருவதுதான் ஐம்பதிலே திறக்தேனப்பர்
பூணேதானிந்தநூல் துறைகளண்பிக்கும்
பூட்டியதோர் பூட்டெல்லாமஞ்சிற் காணும்
தோணவே கருக்குருவும் வழிதுறையுமாகும்
தொடுத்திட்ட செகவேதை வழியேபாரு
பேணவே பதினறு மிதுவேயாகும்
பெலமான முதறகாண்டம் பதினறுமுற்றே (16)

முதற் காண்டம்
முற்றிற்று.

—————•



இந்த முதற்காண்டத்தில் வைத்தியத்திற்குக் குருவும், மருந் ததன்செய்யு முறைகளும் சொல்லி யிருக்கிறது. இனி இரண் டாவது காண்டமும் அதன் கருக்குருவுஞ் சொல்லுவது காண்க.

உ

பரமபதி துணை.

# அகஸ்தியர் பன்னிருகாண்ட

# வைத்தியம்.

## இரண்டாவது வாதகாண்டம் 16

முத்திபெற்றவைத்தியற்கு மோட்சமெய்தும்
மூலமென்ற ரசவாத மிரண்டாங்காண்டம்
சத்தியமாய்ச் சொல்லச் சுந்தரமே சேரு
தாரணியிற் சொன்னார்கள் முதற்சாதி யென்ற
சித்தர்கட்கு கிட்டுமடா மற்றோர்க்கில்லை
செகப்பி யென்ற சாதியெல்லா மாகுமாகும்
குத்தமில்லை உவற்படார்ச்சனிகை தன்னை
குணமான முதற்சாதி யென்னலாமே (1)

என்னலாமது கிடைத்தால் மெத்தநன்று
இயல்பாகச் சிசுவாரினி நன்று நன்று
வன்ன முள்ளஜாதி பதினெட்டு தன்னில்
வகைபிரிவு செய்யாமல் நீதம்வாங்கி
திண்ணமுடன் பீங்கானில் சூடன் சேர்த்து
தீரமுடன்செய்குவாய் செயநீராகும்
உண்ணலாஞ் செயநீரில் துருசுதன்னை
உடன்துவைத்து ரவிதனிலே வைத்திடாயே (2)

வைத்தவுடன் சுண்ணாம்பாய் நீறிப்போகும்
மைந்தனே கொடிய சுண்ண வகையைக்கேளு
சித்தான ரூபியப்பா துருசுச்சுண்ணம்
தேனான மனோன்மணியாள் சுரோணிதந்தான்
வித்தையிலே ரசவித்தை யிதுதானப்பா
வெகுகோடி சித்தரெல்லா மறைத்து வைத்தார்
கொத்தோடே ரகத்தைநீ கொல்லவென்றால்
குணமான வாஞ்சிச்சு பஞ்சாடிதாக்கே (3)

தாக்கிடவே ரசஞ்செத்துச் சிவமணியு மாச்சு
    தனியானரச மணியைக் களஞ்சி செம்பில்
தாக்கிடவே வயதேழு கன்னியாளை
    தனிவெள்ளி யீயததில் பத்துக்கொன்று
தாக்கிடவே சதனைநீ பூசைபண்ணி
    தாயுடைய செயநீரி லரைததுப்பூசி
தாக்கிடவே காடையொரு புடததில போட
    தளதளெனச செநதூர முருககம்பூவே (4)

பூவான செந்தூரம நவலோகததில்
    பூட்டியே செநதூரம் வயதிரெட்டாம்
பூவானதென்று மிதுதானபபா
    பொறநொடியாள் பூவாகும் மூப்புவாகும்
பூவெனறால் பூநீரா அறிநதோமென்று
    பொலனை சாக்கெலலாந சுட்டுக்கெட்டார்
பூவான சுரோணிதமுஞ் செயநீரொன்று
    பூமியிலே அறியாமற போனார்தானே (5)

போனாரே சித்தரெல்லாம் பூணையுண்டு
    பூண்டிருநத பிரமலபி கிடைத்துக்கொண்டு
காணாத சிவனபாதங கண்டு கொண்டு
    கறபமிது கண்டவர்கள் உண்டுதேறி
கோறாத சரீரததைப் பிலததுக் கொண்டார்
    . . குருவென்ற பரைநாதந்தனாலப்பா
வினாலலோ மற்றதெல்லாந சாஸ்திரம் பார்த்து
    வெரும்பினுக்காய்ப் பேசியவர் மாயநதாதானே (6)

தானென்ற கருவங்களு சுத்திபண்ணி
    தனியென்ற களஞ்சிக்கு மிஞ்சாடி சுண்ணம்
தேனென்ற மனோன்மணியாள் கெந்திதனைத்
    திறமாகச்சேர்த்தரை பொறகையன்சாற்றால்
மேனென்றே வொருசாம மரைத்து நீயும்
    வில்லைதட்டிக் காயவைத்துத் தகைகல் கூட்டி
வேனென்ற காடையொரு புடததைப் போடு
    வெந்து சிவசெந்தூர மாகும்பாரே (7)

பாரப்பா செந்தூரஞ் செம்பிலீய
　　பத்தரையுந் தப்பாது இன்னங்கேளு
காரப்பா நாகத்தைச் சுத்திபண்ணி
　　கைமுறையாய்க் களஞ்சிக்கு மஞ்சாடிசுண்ணம்
சேரப்பா நாகமிடை தங்கங்கூட்டிச
　　சேர்த்துநீ கெந்தி தன்னைச்சரியாய்த்தாக்கு
வாரப்பா பொற்றலையின் சாற்றாலாட்டி
　　வகையாறு சாமமது ஆட்டிவாங்கே (8)

வாங்கியேவில்லைதட்டிக் காயவைத்து
　　வளர்கோழிப்புடமிடச் செந்தூரமாகும்
தாங்கியேசெம்பிலிட வயதுபத்தாம்
　　தனித்தனியேவலோகம் வயதோமெத்த
ஏங்காமல்விராலியிலை பறித்துவந்து
　　இடிக்கையிலேசுண்ணமது மஞ்சாடியிட்டு
ஓங்கியேயிடித்துச் சாறுபிழிந்துகொண்டு
　　உத்தமனேலிங்கத்திற் சுருக்குத்தாக்கே. (9)

சுருக்கான லிங்கமது மெழுகுமாகும்
　　சுத்திசெய்த நவலோக பாஷாண மெல்லாம்
இருக்கான மெழுகாகும் வேதைகோடி
　　இயல்பாய்ப் பாஷாண செந்தூரமாகும்
தருக்கான வீரமது மெழுகுமாகும்
　　தாளகமுஞ் செந்தூரந் தானேயாகும்
மறைக்கவில்லை யிந்தவித்தை யப்பா அப்பா
　　வகையாக இதன்பெருமை இன்னங்கேளே (10)

இன்னந்தான் பொற்றலையின் கையான்சாற்றில்
　　இணங்கிவருஞ் சுண்ணமது களஞ்சிதாக்கி
நன்னயமாய்ப் பிழிந்துவைத்து இருப்புச்சட்டி
　　நன்றானசூத மொருபலத்தைக் கொட்டி
மின்னயமா யடுப்பேற்றித் தீயைமூட்டி
　　விளக்குப்போ லெரியிட்டுச் சுருக்குத்தாக்கு
சொன்ன தொருசூதமது கட்டிப்போகும்
　　துடியுள்ள [illegible]ரணையும் நன்றாய்த்திரே (11)

தீரப்பா கெவுனமணி யிதுதான்விதனத
மேதேசமெல்லாஞ் சுற்றிவரக கெவுனமோடும்
காரப்பா வெள்ளீயம நீரைவாங்கும்
கணங்கோடி மணிவசியம கோடாகோடி
பாரப்பா வெடிகுண்டு குத்துவெட்டு
பரிவாக விலககிவிடு மணியினாலே
ஆரப்பா சிவமாலே யிதுதானமெதத
ஆச்சரிய மணிவிதனதை யின்னஞ் சொல்வேன் (12)

சொல்லுவேன் துத்தியிலே பறிததிடிததுச்
சுண்ணம்விட்டுச் சார்பிழிந்து கரியுப்பிட்டு
செல்வமுடன் மூன்றுநா ளரைத்துவாங்கி
சீராக வில்லைதட்டிக் காய்வைத்து
வல்லபமாய் முழப்புடததிற் சுண்ணமாகும்
வயிரவனைப் பூசைபண்ணிச் செமபிலிய
நல்லவனே வயதாறு வாலைபிள்ளை.
நன்றான வாயுவெல்லா மற்றுப்போமே. (13)

வாயுவெல்லா மற்றுதடா அரைபொடியிற் சுண்ணம்
மஞ்சாடி களஞ்சிக்குக் கெநதியாறும்
காயான முருக்கமபூ களஞ்சி கூட்டிக்
காரமிட்டு உருக்கிடவே களங்கமாகும்
ஆயாசமில்லையடா போகநாதன்
அறிந்துதான் கரோணிததிற் செய்தாரப்பா
நாயன்மா ரிதையறிந்தார் மூனபினாக;
நானறிநது வாததின் முறைசொன்னேனே (14)

சொன்னதொரு வெள்ளை நீர்முள்ளிச்சாற்றிற்
சுண்ணமது கால் களஞ்சி யிட்டுவாங்கி
பின்னமிலலா வெள்ளீயம் உருக்கிச்சாய்த்துப்
பிசகாமல் சுருக்கிடவே வெள்ளியாகும்
உண்ணுனே முள்ளியது சுருக்குமெத்த
உத்தமனே தைவேளை சிவந்தவேளை
பெண்ணார்தம் ஊமத்தம் ரெண்டுசாற்றிலே
பேர்சுண்ணமிட ரசமு மணியுமாமே (15)

மணியான ரசவித்தை சுருக்குமெத்த
வண்டருக்கும் கசடருக்கு மியம்பவேண்டாம்
கெணியான கோவை நூற்றிருபத்தைந்தில்
கீர்த்திபெற வைத்தியங்கள் சொல்லிவிட்டேன்
அணிவார்கள் சிவசத்தி பூஜைதன்னை
அன்புடையோர் செய்வார்கள் பெரியோராவார்
துணிகரமாய்ச் செய்தோனே சித்தன்சித்தன்
சூஸ்திரந்தான் ரசவாத காண்டமுற்றே (16)

இரண்டாவது காண்டம்

முற்றிற்று.





இந்த இரண்டாம் காண்டத்தில் வாதாங்க முறைகளைச் சொல்லப் பெற்றது. இனி, மூன்றாவதுகாண்டத்திற் சுண்ணமுறைகள் சொல்லுவதுகாண்க.



உ

பராபரி துணை.

# அகஸ்தியர் பன்னிரு காண்ட

# வைத்தியம்

## மூன்றாவது சுண்ணக் காண்டம் - 16

ஆதியந்தம் நடுவான சோதிபாதம்
அனுதினமும் நெஞ்சில்வைத்துத் துதித்துப் போற்றி
சோதிமய மானதொரு துரியம்பார்த்துத
துரியமதிலாடுகின்ற சிவனேபோற்றி
நீதியாய்நின்ற தொரு மாலேபோற்றி
நேரான அண்டபிண்டத் தருளேபோற்றி
சோதியாம் விந்துவிலே துலங்கும் நாதம்
துரியவெளியடி யெனவே தொழுதிட்டேனே (1)

தொழுதிட்ட பதிகேளு சொல்வேனப்பா
துரியாதீதங் கடந்து துரியம்பாரு
வழுதிட்ட பொன்னிறமாய்க காணுங் காணும்
வடிவான மாரனங்கே நிர்த்தமாகும்
முழுதிட்ட மூலத்தின் மேலேயப்பா
முதிர்ந்து நின்ற குசவனுட வீட்டைப்பாரு
அழுதிட்டாலாவ தென்ன மாடேசொல்லு
அப்பதியை யறிந்துநிற்கக் கருவைக்கேளே (2)

கருவேது உருவேது வென்பார் மாந்தர்
கண்டுபதி தெரிசிக்காக் கசடனாகும்
உருவேது வென்றாக்கால் உபயநாதம்
உன்னுடம்பி லுற்றுப்பார் வேறேயுண்டோ
தருவேது இதைவிட்டால பொருள்தானேது
சாரணியில ஞான முதல்யோகமேது
உருவேது சம்சார உருவதாகும்
உற்றுப்பார் பிறவிபிணி யொழிந்துபோமே (3)

போமப்பா யிப்பதியின் கூறுகண்டு
    போக்கோடே திறமறிந்து வசிவுவாங்கு
நாமப்பா இதுவாலே வகுத்ததாகும்
    நலமாக வகுத்துவைத்தோன் குசவனாகும்
ஆமப்பா குரு விரண்டு மிதுவேயாதி
    அன்பான மனக்கோல மிருநூறும்பாரு
வேமப்பா வேகாத தலையுமாதி
    விளங்கிநின்ற சாகாத காலுமாமே (4)

சாகாத காலதுவே அருகோணந்தான்
    தனில்வேகாத் தலையதுவே மூலமாகும்
போகாத புனலதுவே பரவெளியதாகும்
    போக்கோடே சொல்லிவிட்டேன் சுண்ணம்நூற்றில்
ஏகாத பிர்மகற்பங் கல்லுச் சுண்ணம்
    இதுவுடைய கூறின்றி வேறொன்றில்லை
வேகாமல் வெந்துநின்ற சவுக்காரந்தான்
    விளங்கியதோர் மாலாகும் விந்துபாரே (5)

விந்துநின்ற நிலைகண்டு நாதங்கண்டு
    வெளிகாணப் பிர்மமென்ற கல்லைக்கண்டு
விந்துநின்ற நிலையதுதான் பேயாகேளு
    வெருவாமை மெல்லதுபோற் சுடாதேநீதான்
வந்தவிதம் போனவிதம் ரெண்டுங் கண்டால்
    மகத்தான சுண்ணக்கல் வெளியதாகும்
வெந்துநின்ற சவுக்காரக் கட்டியோடே
    மேவியே அருகிருக்கும் வெள்ளைக்கல்லே (6)

கல்லென்ற சுண்ணக்கல் காரமெத்தக்
    கடுவெள்ளையாய்ப் பார்த்து வாங்கிவந்து
சொல்லென்ற ரவியினுப்புச் சுண்ணம்நீரு
    சுகமான அமுரிபடி யெட்டுள் போட்டு
மல்லென்று கரைத்து அதைத் தெளியவைத்து
    மகத்தான தெளிவிருத்துப் பாண்டத்திட்டு
நில்லென்ற கல்லுப்பைப் பாண்டத்திட்டு
    நேராக எரித்திடுவாய் சாமம்நாலே (7)

காலான சாமந்தா னெரிதனெடுத்து
நலமாக ரவியிலிட்டுக் காய்ந்தபின்பு
சேலானநாத வுப்பு அதனிற்பாதி
செப்பரிய செயவீரம் நாலுக்கொன்று
மாலான நடுவென்ற சீனக்காரம்
மாட்டதிலே யெட்டிலொன்று மாட்டிக்கொண்டு
மேலான குளிக்கல்லில் போட்டுக்கொண்டு
விரவியே வெண்கருவாற் சாமமாட்டே (8)

சாமந்தா னரைத்தபின்பு வில்லைதட்டிச்
சாதகமாய் ரவியிலிட்டுக் காய்ந்தபின்பு
ஏமந்தா ளுச்சுதப்பா யிந்தவில்லை
எடுத்ததொரு ஓட்டிலிந்த வில்லைவைத்து
ஓமந்தா னூறெருவிற் புடத்தைப்போடு
உத்தமனே புடமாறி யெடுத்துக்கொண்டு
வாமந்தான் வெடியுப்பு நீரினாலே
மாட்டியே நீயரைத்து வில்லைசெய்யே (9)

வில்லைசெய்து சீலைமண்ணுஞ் சுற்றிக் கொண்டு
வேண்டியதோ ரைம்ப தெருக்குள்ளேபோடு
தொல்லையிலே விழுகாதே தொழிலைப்பாரு
சூடாறி யெடுத்துமே கல்வத்திட்டு
எல்லையிலே பூநீருநவச்சாரந்தான்
ஏற்றியரை நால்சாம மெடுத்துப்பின்பு
வல்லையிலே பனிமுகத்தில் நீருமுண்டாம்
மாட்டியரை கல்லுப்பு மாண்டவாறே (10)

மாறாக எடுத்ததனை வில்லைசெய்து
மைந்தனே குக்குடத்திற் புடமேபோடு
பேறாக ஆறவிட்டு எடுத்துக்கொண்டு
பேசாதே பூநீரைவிட்டு ஆட்டு
நேராகச் சாம மட்டு மாட்டித்திரு
நிலைத்ததொரு வில்லையைததான் ரவியிற்போடு
கூறாக ஓட்டில் வைத்துப் பூநீர்ச்சீலை
கொளுகியே ஐம்பதெருக் குள்ளேபோட்டே (11)

போட்டுவைக்கச் சுண்ணமதாய் நீறிப்போச்சு
 புகழாக எடுத்ததனைக் கல்வத்திட்டு
ஆட்டிடவே கடுகைகார நீரைவிட்டு
 அப்பனே ஆட்டியெடு சாமமொன்று
நீட்டவே அஞ்சுசுண்ணக் குகையில் வைத்து
 நேராகப் பூநீராற் சீலைசெய்து
மூட்டவே ரவிக்குள்ளே காயவிட்டு
 முசியாமலோட்டில் வைத்து ஊதிப்போடே (12)

போட்டிடவே சுண்ணமென்ற வழலையாச்சு
 பொற்பிறவி யுண்டாச்சு பொருளுமாச்சு
நீட்டிடவே அண்டாண்டம் நீறிப்போச்சு
 நிலையாத வாதமப்பா நிலைக்கலாச்சு
காட்டிடவே சணிகையுட நாதத்தாலே
 கல்லுப்புச் சுண்ணமதாய்க் கருவுமாச்சு
கூட்டயிதன் துறையறிந்து செய்திட்டாக்கால்
 குறையாத வாதவித்தை வேதைதானே (13)

தானென்ற கற்சுண்ணம் பலந்தான் ரெண்டு
 தன்மையுள்ள செயசீரம் பலந்தான் ரெண்டு
ஊனென்ற பூரமொன்று கூட்டிக்கொண்டு
 உத்தமனே கல்வத்தி லிட்டுஆட்டில்
வேனென்றே யிளகியது குழம்பாய் நிற்கும்
 மெதுவான பீங்கானி லிட்டுக்கொண்டு
வானென்ற பனிமுகத்திலிருக்கத் தண்ணீர்
 மைந்தனே வீரமதிற் காசுபோட்டே (14)

போட்ட பின்பு செயநீர்தான் வழலையப்பா
 புதுமையுள்ள கல்லுப்பை நீராலாட்டி
நாட்டுடைய வில்லைதட்டி ரவியிற்காய்ந்து
 நல்லதொரு அஞ்சுசுண்ணக் குகையிலூது
மூட்டுடைய சுண்ணம்பாம வீரங்கூட்டி
 முக்கியமுள்ள வாய்நீரால் மத்தித்தேதான்
தாட்டிகமாய்ச் சூடனுக்கு அங்கிபூட்டித
 தடையறவே மூன்றுநாள் காயவைத்துக்
கூட்டியே அஞ்சுசுண்ணக் குகையிலூது
 கூச்சமலல் சுண்ணம்பாய்ப் போகுந்தானே (15)

நாமென்ற பூநீரைச் செயநீர்பண்ணி
தடையறவே சாக்கெல்லாங் கட்டிக்கொண்டு
ஊமென்ற உடலைவிட்டு வெளியே பார்த்து
ஓம்பிடிந்து போகாதே உரித்தாய்ச் சொன்னேன்
தேமென்ற மனோன்மணியே பூரணந்தானாகும்
சிவமென்றுமிங்கும் பராபரமே கருவதாகும்
நாமென்ற அகம்பிடித்தால் தலைதெறித்துப்போம்
கல்லசுண்ணம் மூன்றாங் காண்டந்தான் முற்றே (16)

மூன்றாவது காண்டம்

முற்றிற்று.

---



இந்த மூன்றாவது காண்டத்தில் சுண்ணகாண்ட முறைகளைச் சொல்லப் பெற்றது. இனி, நான்காவது காண்டத்தில் செந்தூர முறைகள் சொல்லுவது காண்க.



உ

பரமபதி துணை.

# அகஸ்தியர் பன்னிருகாண்ட

# வைத்தியம்.

## நான்காவது செந்தூர காண்டம் - 16

ஞானமுத்தி யென்தனுக்கு உபதேசித்த
    நந்தீசர் திருவருளால் நவிலக்கேளு
மானமுதந்தி செந்தூரம் வைத்தியமாகும்
    வண்டருக்கும் திருடருக்கும் வெளிவிடாதே
ஈனமுற்ற சண்டாளர்க்கிய வேண்டாம்
    இன்பமுட னின்றால் மேலிச்சைவைத்து
தானமுற்றுத் தொண்டுசெய்வோர் தனக்குஈய்ந்தால்
    தர்மமுண்டுகர்மமில்லை சாற்றக்கேளே (1)

### அயச் செந்தூரம்.

சாற்றக்கேள் அயலோகச் செந்தூரத்தைத்
    தான்கேளு அரபொடியைப் பலந்தான் வாங்கி
மாற்றில்லா நெத்தான தேங்காய் நெய்யில்
    மண்டலம் வைத்திருந் தெடுத்தால் சுத்தியாச்சு
காற்றமுட னூறலும்போம் கருப்புமாகும்
    நன்றான அரபொடிக்கிச் சரியாய்கெந்தி
போற்றரியப் பழச்சாற்று லரைத்துவாங்கி
    புதுச்சட்டி தன்னில்வைத்து ஓடுமூடே (2)

### தாம்பூரச் செந்தூரம்.

மூடியே சீலைசெய்து சாயம்நாலு
    முடங்காமல் தீயெரித்து யெடுத்துப் பாரு
வாடியே திரியாதே பித்த நோய்கள்
    மாண்டுபோமிஞ் சிச்சார் மண்டலமே கொண்டால்
தேடியே அலையாதே தாம்புர செந்தூரம்
    செம்பினுட அரபொடியும் பலந்தான் வாங்கி
காடியுடன் அபினியமும் ரெண்டுஞ் சேர்த்துக்
    கரைத்துமே அரபொடியை யதிலே யிட்டே (3)

இட்டுவைத்து மண்டலஞ் சென்றெடுத்துப் பாரு
இந்திரனைப் போலிருக்கும் ஊறல்போகும்
பட்டுப்போம் சரிகெந்தி கூடக்கூட்டிப்
பழச்சாற்றி லரைத்திடுவாய் சாமம்நாலு
வட்டுப்போல் சட்டிக்குள் வைத்துமூடி
மண்பூசி யெடுத்திடுவாய் சாமமநாலு
கட்டுமடா செந்தூர முருக்கம்பூப்போல்
கலங்காதே நெய்யி லுண்ணக் குன்மம்போமே (4)

கருவங்க செந்தூரம்.

போமப்பா கருவங்கம பலமொன்றேதான்
புடம்போடு ஆவரம்பூ வரைத்துப்பூசி
நாமப்பா ஏழுதரந் தீரத்துதானால்
நன்றாகக் கட்டாச்சு பலமொன்றுக்கு
ஆமப்பா காற்பலந்தான் ரசமுங் கூட்டி
அரைத்திடுவாய் சரிகெந்தி பழச்சாற்றாலே
தாமப்பா அரைத் தெடுத்து வட்டுப்போல
சட்டிக்கு ளிட்டுநீ மூடும்சீலை (5)

சட்டியிட்டுமேல் மூடிச்சீலை செய்து
தானெரிப்பாய் சாமம்நால்கம லம்போலே
அட்டதிசை வெல்லுமடா செந்தூரந்தான
அறுமூன்று குட்டநோய் கற்றாழஞ்சாற்றில்
முட்டவிட்ட காப்பநோய் மேகந்தீரும
முன்னவனைப் பூசிப்பாய் வெள்வங்கம் வாங்கு
கட்டிவிட்ட வெண்முள்ளிச சாற்றிற் சாய்க்க
கட்டியது நொருங்கும்பார் சரிகெந்தி கூட்டே. (6)

வெள்வங்க செந்தூரம்.

கெந்தியிட்டுப் பழச்சாற்று லரைத்துவட்டு
கெடியாகச் சட்டிக்கு ளிட்டுமூடி
சந்தேகமில்லாமற் சீலைசெய்து
தானெரிப்பாய் நாளொன்றிற் செந்தூரந்தான்
தந்தனமென் றேடுமடா சூலைநோய்கள்
சயங்கள்முத லற்றுதடா இருமல்தீரும்
வந்தநோய்க் கனுப்பானந் தேனிலுண்ண
வாங்குமடா மேல்விழுந்தவெள்ளை போயே (7)

வெள்ளி செம்பு பித்தளையு மிரும்புநாகம்
வெள்வங்கம்கருவங்கம் உருக்கு வெங்கலமும்
கள்ளிச்சா றதனிலேந்து சுத்திசெய்து
களஞ்சியொன்று வகைவீதம் கெந்திசேர்த்துத்
துள்ளுரசங் களஞ்சியிட்டுப் பழச்சாற்றலாட்டிச்
சுகமாக அரைத்துவட்டுச் சட்டிக்குள்ளே
மெள்ளவைத்து மேலோடு கவிழ்த்திமூடி
விரும்பியே சீலைசெய்து அடுப்பிலேற்றே. (8)

நவலோக செந்தூரம்.

அடுப்பில் வைத்துத்தீ யெரிப்பாய்சாமம்நாலு
அருணன் போலிருக்குமடா செந்தூரத்தைத்
துடிப்புள்ள பதின்மூன்று சன்னிக்குந்தான்
சுகமாகக் கொடுத்துவிடு சுரத்துக்கப்பா
கொடுப்பாயே மிளகுசுக்கு அரத்தை மூலம்
கொத்தமல்லி பேய்ப்புடலின் கஷாயந்தன்னில்
எடுப்பாய்நீ வெள்ளி செம்பு லெங்கலம் பித்தாளை
இரும்புமுத லஞ்சுவகை களஞ்சியொன்றே. (9)

வகைவகைக்கிக் களஞ்சிரசம் சவ்வீரங் கூட்டு
லிமந்தனே களஞ்சேழு கெந்தியேழு
துகையீரேழ் பதினாலும் பழச்சாற்றலாட்டி
துகையான பூநாகச் சாற்றலாட்டி
புகையடங்க சட்டியிலே வைத்துமூடி
புகழ்மூன்று சீலைமண்ணுஞ்செய்து வைத்து
சிகைநாலு சாமமது யெரித்துவாங்கு
செந்தூரமாகுமது சூலைபோமே. (10)

சூலைபதினெட்டுமறுஞ் சோகைதீரும்
சுத்தமாங் கைகாலில் முடக்குந்தீரும்
மாலைக்கண் கபாலநோய் புத்துந்தீரும்
வாந்தியொடு வயற்றிரைச்சல் கடுப்புந்தீரும்
சாலவே யிதற்கெல்லாம் பத்தியமாயுண்ணு
தடிப்பென்ற சிகப்புவெள்ளை கருப்புந்தீரும்
மூலவே நாலுவகை செந்தூரங்கேள்
முட்டை பற்பம் அப்பிரகபற்பமாமே. (11)

பற்பமுடன் பவளபற்பம் வங்கபற்பம்
பாச்சுவாய் வகைக்கு அரைப் பலமெடுத்து
உற்பனமாய்ச் சரிகெந்தி கூடச்சேர்த்து
உறவாட்டு பழச்சாற்றால் நாலுசாமம்
கற்பூரம் அரிதாரம் கூடச்சேரு
கலங்காம லரைத்துச் சட்டிக்குள்ளேவைத்து
நற்பாக மேலோடு சீலைசெய்து
நன்றாக நால்சாம மெரித்துவாங்கே (12)

வாங்கினதோர் செந்தூர முருக்கம் பூப்போல்
வருமிஞ்சிச் சாற்றில் சன்னிக்குந்தாக்கு
ஏங்கியே அலையாதே கிரந்திசூலை
இடுப்புவலி வருகெண்டை தேனிலுண்ணு
தாங்கியதோர் வாய்வுக்கு நெய்யிலுண்ணு
சண்ணுமடா வைத்தியமும் நூறிற்பாரு
தூங்கியே விழுகாதே கவனித்துப்பார்
சுரத்துக்கு மாத்திரையைச் சொல்லக்கேளே. (13)

சொல்லக்கேள் பாஷாணங் கெவுரிலிங்கம்
சுகமாகச் சுத்தியது செய்து கொண்டு
சொல்லக்கேள் குழிக்கல்லில் மூன்றுமிட்டு
சுருக்கான பழச்சாற்றால் மூன்றுசாமம்
நல்லோர்கள் பணியும் விநாயகனைப் போற்றி
நன்றாக ஆட்டியதை வழித்துக் கொண்டு
மெல்லவே சிறுபயறு உழுந்துவீதம்
விளங்கவே உருட்டியதை உலர்த்திக் கொள்ளே. (14)

உலர்த்தியே ஒருகலசந் தன்னிலிட்டு
உடன்மூடிச் சீலைசெய்து நெல்லுக்குள் வைத்து
நலத்துடனே மண்டலஞ்சென் றெடுத்துக் கொண்டு
நலங்கெட்ட வாதசுரந் தனக்குக்கேளு
பெலத்துடனே வேப்பந்தோல் கஷாயத்திலுண்ணு
பேரான பித்தசுரங் குடிகெட்டோடும்
குலத்துடனே சிலேற்பனசுரத்துக் கெல்லாம்
கொடுத்துவிடு தேனிலே குணமாய்த் தீரும். (15)

திருமடா உடல்நோயுந் தெளிந்து போகும்
செந்தூரஞ் செய்வதற்கு இதுதான் சூஸ்திரம்
ஆருக்தானிப்படியே சுருக்கிச்சொல்வார்
அப்பனே சுந்தரமே அறிந்து செய்வாய்
பாருநீ குருவேணுங் கைமுறைதான் வேறும்
பதறுமீத யிப்படியே வைத்தியஞ்செய்வாய்
காருநீ யீரிரண்டு காண்டமாகும்
கருவானசெந்தூரம் பதினாறு முற்றே. (1

நான்காவது காண்டம்

முற்றிற்று



இந்த நான்காங் காண்டத்திற் செந்தூர முறைகள் சொச் பெற்றது. இனி ஐந்தாவது காண்டத்திற் பற்ப முறைள்க சொல லுவதுகாண் லுவம்.



உ

பரமபதி துணை.

# அகஸ்தியர் பன்னிரு காண்ட
# வைத்தியம்.

## ஐந்தாவது பற்ப காண்டம் 16

### பவளச் சுண்ணம்.

செந்தூரம் பதினாறில் திர்க்கஞ் சொன்னேன்
சிவானந்தி யென்குருவைப் போற்றி செய்து
உந்தனுக்குப் பற்பமதைச சொல்லக்கேளு
உமையாளைப் பாகில் வைத்த சிவனைப் போற்றி
தந்திரம்போற் பற்பமடா பவளச் சுண்ணம்
தனிப்பவளம் பெரிதாக வாங்கி வந்து
அந்தகனார் வாகனத்தி னிலை யரைத்து
அப்பியே ஒட்டில் வைத்து ஒடுமூடே. (1)

மூடியே குக்குடமாம் புடத்தைப் போடு
முட்டைபோல் நீறுமடா பவளச்சுண்ணம்
தேடியே கொழுஞ்சி தும்பை பிரண்டை சாரணை
சிறுமுருங்கை வகையஞ்சு கசாயத்துண்ணு
பாடிவந்த மூன்றிலுள்ள வியாதி தீரும்
பறந்துவிடுஞ் செமியாத வாய்வு தீரும்
ஆடிவிடுங் கைகால்கள் நடுக்கந் தீரும்
அண்டத்தோல் தனைநீற்ற முறையைக் கேளே (2)

### முட்டைஓடு சுண்ணம்.

முறையாக பவளத்தை நீற்றி வைத்து
முன்சொன்ன இலையரைத்து முட்டைத் தோட்டை
குறையாமல் பிசிரிவைத்துஒட்டி லிட்டு
குணமாக மேலோடு குக்குடத்தில் நீறும்
மறையாதே சருக்கரையில் கூட்டியுண்ண
வரிசை நீரிழிவதுவு மாண்டுபோகும்
சரையாதே யாரிடத்தும் வெளியிடாதே
சரீரத்தில் நீர்களது அற்றுப் போமே (3)

நீர்கொற்றுப் போகும்டா வாழைப் பூவை
நிழலுலர்த்தா யுலர்த்தியே சுட்டசாம்பல்
பார்க்கையிலே அதிசயமா மூலிநீர்விட்டு
பருமுத்து மேல்பூசிப் புடத்தைப் போடு
பூக்கமலம் போலமர்ந்து நீறிப்போகும்
புண்ணியவான் தானருந்த வாய்வு தீரும்
சீக்கிரமே செய்துண்ண வயிரதேகம்
தேவனே யாரானும் அருந்தலாமே (4)

ரசச் சுண்ணம்.

அருந்துவாய் ரசபற்பஞ் சொல்லக்கேளு
அப்பனே கருவூமத்து பாஷாணங் கெந்தி
வருந்தியே யரைத்து மைபோற் குகையாய்ச் செய்து
வளமான ரசங்களஞ்சி யஞ்சுவிட்டு
தருகுதயமாய்ச் சட்டியுள்ளே யுப்பைக் கொட்டி
தாமாகப் படிமூன்று குகையுள் வைத்து
பெருந்தீயாய்ப் போடாதே மேற்சட்டி மூடி
பிசகாமல் மண்சீலை எழுஞ் செய்யே (5)

செய்யவே கமலம்போ லெரித்து வாங்கி
திறமாக மேற்சட்டி பதங்கமாகும்
உய்யவே சுறண்டியெடு பற்பந்தன்னை
உத்தமனே பத்திரமாய் வைத்துக் கொண்டு
அய்யமில்லை குட்டம்பதி னெட்டுந்தீர
அரைப்பணமு மூன்றரை நாளேழுபோது
பய்யவே வாய்கட்டும் மருதம்பட்டை
பாச்சுவாய் கசாயமிட்டுவர யில்வாறே. (6)

வாயில் விட்டுக் கொப்பளிக்கக் கிரந்திகுலை
வாதபித்தங் காமாலை சோகை பாண்டு
ராயமது பிலக்குமடா நோய்கள் தீரும்
கண்டமாலை யென்றதெல்லாங் கடந்துபோகும்
சயமாய் வந்தபில்லி மூட்டக்கந்தீரும்
வஞ்சனையாய் வைத்தவெல் மயக்கந்தீரும்
[illegible]மா யி[illegible]கம் ராறதிற்பாரு
தானுனை அப்பிரகபற்பம் பாரே. (7)

### அப்புரக பற்பம்.

தானான அப்புரகத் தகடுவாங்கி
தயவான கோமயத்திற் சுத்திசெய்து
கோனான கற்பூரவல்லி யிலையரைத்து
குக்குடமாம புடம்போட நீறிப்போகும்
பானான அமுக்கிரா வேர்க கிசாயம்
பாக்குமடா அகத்திவேர்க கிசாயம் நன்று
ஊனான மேகமென்ற ரோகமெல்லாம்
உஷ்ணங்கள் உள்சூடு மாறிப்போமே. (8)

### வெள்வங்க பற்பம்.

மாறிவிடும் வெள்வங்கம நீருள்ளிச்சாற்றில்
மகிழ்வாக உருக்கிச்சாய மூன்றுவட்டம்
தேறியே யிதையெடுத்துச் [illegible]
திடமாக அதையரைத்து பொதிந்து சீலை
[illegible]ரியே சீலைசெய்து குக்குடத்தில் நீறும்
மேகத்துக் குறைபாணம நெய்யிலுண்ண
தூரிவிடு மேகமென்ற [illegible] போகும
அப்பனே [illegible] போச்சே. (9)

### கருவங்கப் பற்பம

குன்மம்போம் கருவங்க நீறதனைக்கேளு
குணமான கருநொச்சி யிலையுலர்த்தி
வன்மமாய வங்கந்தனைப் பொடியாய்ச்செய்து
வகையாக [illegible]லைப் பொடியிற் சேர்த்து
தன்மமடா கம்பளியிற் [illegible]திந்துவைத்து
தானிரண்டு மண்சீலை செய்துலர்த்தி
கன்மமில்லை [illegible]த்தில நீறிப்போகும்
கருவங்க பற்ப[illegible] [illegible]முழுதுதானே. (10)

### தார பற்பம்.

சுழூனான வங்கபற்பம செய்திகொள்ளு
துடியான மேகமெல்லாம் [illegible]போகும்
அழிவான சிரங்குமேற தடிப்புதீரும்
அரிதார பற்பம்தனை யவையிட்டுக்கேளு
கழூகாத புரசவிரைத் தைலத்தனில்
காற்பதுகா ளதை[illegible] வைத்தெடுத்து
வழுவாதே அதிளைபட்டை சமூலஞ்சட்டி
மைபோலே அரைத்துருட்டிக் குளையும் பண்ணே. (11)

உருட்டிவைத்த குகைக்குள்ளே கோளிக்கட்டம்
உடன்பிரக்கி வெள்ளை மலம்பொடிய தாக்கி
அருட்டியே மால்தேவி கீள்மேலிட்டு
அம்மருந்தால் குகைமுட்டச் சட்டிச்குள்ளே
பொருட்டாக ஆற்றுமணலரைவாசியிட்டு
பொருந்துகுகை சீலைசெய்து அதினமேலிட்டு
மருட்டாக மேலோடு கவிழ்ததிமூடி
மண்பூசி யெரித்திடு நால்சாமந்தானே. (12)

எரியிட்டு ஆறியபின் னெடுத்துப்பாரு
இருக்குமப்பா கூகைநீர்போலே பற்பம்
அரிவுகெட்ட சனங்களுக்கு மீளாநோய்க்கும்
அரிதான இருமலோடு இளைப்புக்கெல்லாம்
வரியான வெள்ளாட்டுப் பாலிலுண்ண
வாங்குமடா நாலுநோ யிதிலேதீரும்
சூரியாக வைத்தியத் திரட்டென்பதும்பார்
குறையாத செல்வமே யின்னுங்கேளே. (13)

கெந்தக பற்பம்.

இன்னுங்கேள் சிகப்பியுட நீதம் வாங்கி
இனிதான கெந்தகத்தை ஊரவைத்து
மன்னவனே பத்துநாற் சென்றபின்பு
வரிசையா யதையெடுத்துப் பூநீற்றுக்குள்
சொன்னேனே கலசத்திற் கீழ்மேல்நீரு
சுகமாக வைத்துமே மேலோடுமூடி
நன்னயமாய்ச் சீலைசெய்து குளிதான்வெட்டி
நலமான திருகுகள்ளிச் சாம்பல்போட்டே. (14)

சாம்பலுமே குளிகையிட லரைவாசியிட்டு
தனிமருந்துக் கலசத்தை மேலேவைத்து
சாம்பலையு மதுமேலே யிட்டுமூடி
தான்மண்ணை யிட்டதன்கீ ழுடுப்புக்கூட்டி
தேம்பாமல் நாற்பதுநாள் தீயைமூட்டி
திறமாக எரித்திடு நாள்ச்சென்ற பின்பு
சோம்பர[illegible]த்துநாளாரப் போடு
[illegible]த்தாண்டியே நீயெடுத்துப் பார்த்திடாயே. (15)

பார்த்திடவே கெந்தகந்தான் சுண்ணமாகும்
    பரிசுகெட்ட கிரந்திக்கு வெல்லமப்பா.
ஏற்கவே சூலைக்குமதுவே யாகும
    இணங்காத குனமத்துக் குமட்டிச்சாறு
வாக்கிலுள்ள இருமலுக்கு நல்லெண்ணை
    மண்டைப் பிணிவஷத்துக்கு மெண்ணையாகும்
ஏற்கையுடன் நிகண்டுநூற் பதினாறும்பார்
    இதுசூஸ்திரம் அஞ்சாக யிசைத்தேன் முற்றே. (16)

ஐந்தாவது காண்டம்

முற்றிற்று.



இந்த ஐந்தாவது காண்டத்தில் பறபக்காண்ட முறைகளைச் சொல்லப் பெற்றது, இனி ஆறாவது காண்டத்தில் தைலமுறைகள் சொல்லுவது காண்கக.



பரமபதி துணை

# அகஸ்தியர் பன்னிரு காண்ட

# வைத்தியம்.

## ஆறுவது தைலக்காண்டம் - 16

இசைவான வெள்ளிமலைச் சிவனைப்போற்றி
　　என்குருவின நந்தீசர் பாதம் போற்றி
அசையாத செந்தூரம பற்பமுண்டால
　　அனல்கொண்டு உடல்சூடு தணியவேணும்
நிசமான தைலமற்புத மதாக
　　ரோகச் சுந்தரமே சொல்லக்கேளு
திசைபுகழும் தைலமுறை நூறறிலேதான்
　　செப்புவேன் யெப்பகேதாள் பலமும்நூறே. (1)

### வாதத தைலம்.

நூறுபலமறுகன்வேர பலமும்நூறு
　　நொடிவாத மடக்கிவேர் பலமும்நூறு
வீருபச்சை ஊமத்தைவேர் பலமும்நூறு
　　விளம்பிவய நானூறறில பலமுமா நகு
சாரியுட னைதத்தட்டி பானையிட்டு
　　தண்ணீரு தூணிவிட்டு வறறக் காய்ச்சு
ஆறவிட்டு வடிகட்டிப் படிநாலாக்கி
　　அப்பனே யிளகஞ்சு பலமும்போடே. (2)

போடப்பா சாதிக்காய் சாதிப்பத்திரி
　　புகழுடனே அரத்தைசுக்கு இஞ்சியேலம்
கூடப்பா வெள்ளுள்ளி ஓமம் மல்லி
　　கூறுவேனதி விடையஞ் சிரங்கூட
நாடப்பா இதுவெல்லாங் களஞ்சிவீதம்
　　நன்றாகப் பொடிசெய்து வைத்துக்கொண்டு
தேடப்பா வெள்ளாட்டு பசுவின்பாலும்
　　செவ்விளநீர் மூன்றும் படிமூன்றாமே. (3)

ஆமப்பா தைலம் வைத்த பாண்டந்தன்னில்
அஞ்சுபடி யெண்ணைவிட்டு மருந்தையரைத்துப்போடு
நாமப்பா வீளிநீர் கூடவிட்டு
நன்றாக மெழுகுபதம்
போமப்பா முழுகிவர நோய்
புண்ணியவான் செய் செய்யான்
ஆமப்பாவாதமென்ற தெலம்
அறறுதடா வாதசுரந் தீர்க்கும் பாரே. (4)

பித்தசுரத்துக்குத் தைலம்.

தீருமடா பித்தத்தின் தைலங்கேளு
செம்முள்ளி சித்தகத்தி அமுக்கிறாவும்
பாருநீ கொச்சிவேர் நெல்லிவேரும்
பண்பான தொட்டிப்பைவேர் பிரிவேரும்
சீருடனே இவ்வேழும் பலம் நாலப்பா
சிறக்கவே பானைதனில் தரிகதப்போட்டு
வாருநீர் தூணிவிட்டு வற்றங்காய்ச்சி
வடிகட்டிப் படிநாலு மெடுத்துக்கொள்ளே. (5)

எடுத்துஒரு பாண்டத்தி லிட்டுசுகமாகாண்டு
இதமாக மேல்வகைகளையச் சொல்லக்கேளு
எடுத்துமே எண்ணை படிநாலுவிட்டு
இஞ்சிச்சார் பழச்சாறு நெலவிக்காய்ச்சார்
எடுத்துவிடு மொசுமொசுக்கை கொடுபசைசாறு
இனிதான பாகலிலை கரிப்பான்சாறும்
எடுத்துவிடு பசுவின்பால் இளநீர்தன்னை
இதொன்பதும் வகைக்கு அரைப் படியாய்ச்சேரே. (6)

சேரப்பா மிளகுசுக்குத் திருமபுயேலம்
சித்தரத்தை அதிவிடையஞ் சாதிக்காயும்
ஆரப்பா திப்பிலி வால்மிளகு கூட்டு
அப்பனே வேப்பரிசி கடுக்காய் ஓமம்
காரப்பா சந்தனமும் விலாமிச்சைவேரும்
கஸ்தூரி புனுகுகோஷ்டம் தானிக்காயும்
நேரப்பா இதுவெல்லாங் களஞ்சிவீதம்
நிறுத்துநீ பொடிசெய்து கூட்டிப்பேசி. (7)

செய்துயெரி மெழுகு பதம் வடித்துக்கொண்டு
சீலையிலே வடிகட்டி முழுகுவாய்நீ
பையனுக்கு மாகுமடா சூலிககாகும்
பைத்தியங்க ளேற்றதெல்லா மோடிப்போகும்
கொய்துவிடுஞ் சன்னிபதி மூனறுக்காகும்
குடிகெடுத்த பல்நோயுந் தீர்ந்துபோகும்
கொய்துவிடுங் குரைநோயுங் கிரந்திருலே
குட்டநோய் தீருமென்று சொன்னேனானே. (8

சிலேற்பனத் தைலம்.

சொன்னேனே சிலேற்பனததின் தைலஞ்சேளு
சுண்டைவேர் அவரிவேர் தூதுவளைசமூலம்
சொன்னேனே கண்டஙகததிரியின் வேரும்
தொண்டுபெற வேலிவேர் தாளிவேரும்
சொன்னேனே சம்பாநெல் வேரோடேழும
தூக்குவாய் பலம் நூறுந்தரித்துக் கொண்டு
சொன்னேனே பானைக்குள் போட்டுநீரை
தூணிவிட்டு காச்சிப் படிநாலுவாங்கே (9)

வாங்கியே எண்ணை படிநாலுவிட்டு
வால்மிளகு சாதிக்காய் அரத்தைசுக்கு
ஓங்கியே அதிமதுரம் அக்கிராகாரம்
ஓமமுடன் சீரகமும் வசம்புமல்லி
தாங்கியே வகைபத்துங் கழஞ்சிவீதம்
தானூரவாய்ப் பொடிசெய்து கூடப்போட்டு
ஏங்கியே முலைப்பாலு மருஅசசாறும
இதுரெண்டுங் கூடவிட்டுக் காய்ச்சுவாயே. (10)

காய்ச்சியே மெழுகுபதம் வடித்துக்கொண்டு
கணபதிக்கிப பூசைசெய்து முழுகிவாநீ
தேச்சியமாய் சிலேறபனத்தி லெழுநதநோய்கள்
தீருமடா சுந்தரனே திரத்தைப்பாரு
மாச்சிந்த மூன்றுவகை தயிலத்தாலே
மாண்டுதடா மூன்றுவகை நோயுந்தீரும்
தேச்சியங்கள் வையாதே பதிமூன்றுசன்னி
தீக்கவே தைலமொன்று வைப்பாய்கேளே. (11)

### சனனிதைலம்.

வையப்பா வேப்பெண்ணை ஏரண்டத்தெண்ணை
வகையாகப் புன்னையெண்ணை புங்கயெண்ணை
மெய்யப்பா இலுப்பையெண்ணெய் பமஞானதுமவிட்டு
விளம்புகிறேன் மேல்மருந்து வெளியதாக
ஐயமில்லை முசுருமுட்டை கோழிமுட்டைமஞசள்
அடைக்கோழி மலமுடனே தேடிமூன்றும்
செய்யவே பூநாகம் வசம்பு உள்ளி
சீரகமுஞ் சுக்குடனே சமனாயச்சேரே. (12)

சமனாக இவைபல மொன்றாகச் சேர்த்து
சரியான யெண்ணெயுடன மருந்துமபோட்டு
கமகமென்று மெழுகுபதம காயச்சிக்கொண்டு
கணபதிக்குபூசைபண்ணி எடுத்துவைத்து
எமனாகவநதசனனி பதிமூன்றுக்கும
இரையளவு உளளுக்குக கொடுக்கததீரும்
உமையாளை மேலுக்குத தடவத்தீரும்
உததமனேஇத தைல முறைசொல்லாதே (13)

### சன்னி தீர்ந்தபின் மூழுக்குத்தைலம்.

சொல்லக்கேள் வேப்பெண்ணை ஏரண்டதெண்ணை
துடியான புன்னை யெண்ணை புஙகனெண்ணை
வெல்லவே ஆவெண்ணை அஞ்சுங்கூட்டி
விளங்கவே படியளநசம வைததுககொண்டு
சொல்லக்கேள் வில்வவோ வேலிவேரும்
துளசி கத்திரிவேரும் தூதுவளைசமூலம்
வல்லவனே மொசுமொசுக்கை வேளைவேரும
வளங்குசங்கவோ மேனிவேருஞசொல்லே. (14)

சொல்லென்ற வேருகளைத் தோண்டியப்பா
சுகமுடனே மண்போகக் கழுவிக்கொண்டு
வல்லதொரு வேருகளைத துண்டுதுண்டாய்
வைத்தேதா ஞேரிடையா வைததுக்கொண்டு
நல்லதொரு ஒன்பதுவும் துலாமொனறப்பா
நருக்கியொரு பானையிட்டுத் தூணிநீரும்
மெல்லவே காய்ச்சியதை படிநாலாக
வேகேட்டி வடிகட்டி யெடுத்துவையே (15)

எடுத்து நீ விநாயகர்க்குப் பூஜை செய்து
இனிதான ஜன்னிவந்து தீர்ந்து போக்கு
தொடுத்தவொரு தைலத்தை முழுகச்செய்தால்
சுகமாகும் ஜன்னிகளு மணுகாதப்பா
அடுத்தடுத்து மூன்றுநாம் முழுகச்செய்து
அன்மைக்குப் புளிப்பை நீக்கச்சொல்லு
கடுத்தமுள தைலமிது வெளிவிடாதே
கணக்கான இருமூன்று காண்டமுற்றே. (16)

ஆறுவது காண்டம்
முற்றிற்று.

---

இந்தப்பாட்டு இரண்டும் யேட்டினே துண்டாயிருந்ததை சில மகான்க ளிதையுஞ் சேர்த்துப் போடவேணுமென்று விரும்பிய தால் இதையுஞ் சேர்த்திருக்கிறது

பித்தத்திற்குத் தைலம்.

உத்தவொரு பித்தமாத் தைலங்கேளு
உண்மையிது கோவைவேர் கொடிப்பைவேரும்
நத்தசெப்பு நெருஞ்சி சிறுகீரைவேரும்
நன்னாரி துளசிவேர் விரகதிவேரும்
சுத்தியாய் சண்டைவேர் கைவசளேட்டும்
தூணிகீரா பாகோயிட்டு வேரும்போட்டு
வத்தவே காய்ச்சிவிடு படிநாலாக்கி
வடிகட்டி நாலுபடி எண்ணெவாரே. (1)

எண்ணெயிட்டு மிளகு பலம்பத்தும்போட்டு
இனிதான மெழுகுபதம வடித்துமூழ்கு
உண்ணவிட்டு பத்தியமாய் நின்றுதேரு
உலகத்திலிது சுருக்கத் தைலபாகம்
விண்ணளவு நோயெல்லாம நீங்குதுபோகும்
வெளிவிடா தடக்கினவன் சித்தனாகும்
பொன்னப்பா நல்பராறா சொன்னவாக்கு
புகழ்ந்துரைத்த பாட்டிதுதானிரண்டு முற்றே. (2)



இந்த ஆறுவது காண்டத்தில தைலக்காண்ட முறைகளைச் சொல்லப் பெற்றது, இனி ஏழாவது காண்டத்தில் கற்பஞ்சொல் லுவதுகாண்குதக





பரமபதி துணை.

# அகஸ்தியர் பன்னிரு காண்ட

# வைத்தியம்.

## ஏழாவது கற்ப காண்டம் - 16

சீராகச் சடையில் கெங்கை தன்னைவைத்த
சிவன்மயேஸ்பரி பாதந்தினமும் வாழ்த்தி
நேரான அடிமுடியுந் நெஞ்சில்வைத்து
நேர்மையுடன் மனோன்மணியைப் பூஜைசெய்து
காரானை முகவனையுங் கருத்துள்வைத்து
கற்பமுறை சொல்லுகிறேன் சுந்தரமேகேளு
தீராதசாபமது தீர்த்துநீயும்
தீச்சை முப்பத்தி ரண்டையுமே சித்திசெய்தே. (1)

அறுசுவை களட்ட.

செய்தபின்பு சரீரத்தின சுவைகள்போக்க
செப்புகிறே னறுசுவையுங் களற்று மார்க்கம்
எய்துவிடுங் கடுக்காயைப் பொடியாய்ப் பண்ணி
ஏரண்டத் தெண்ணெயுடன் கலந்துகொண்டு
துய்யவே வெள்ளைக் காக்கணத்தின் வேரை
சுகமாக அரைத்து எண்ணெகூடச்சேர்த்து
மெய்யுடனே மெழுகுபத மாகக்காய்ச்சி,
மேலாக மூனறுநா ளருநதுவாயே. (2)

அருந்திவிடச்சீதமெல்லாங் கழிந்துபோகும்
அரிவுடனே மலமெல்லா மிரங்கிப்போகும்
பொருந்திநின்ற சிலேற்பனத்தின் வியாதியாவும்
போகுமப்பா உடலைவிட்டு அறுசுவையும்
வருந்துவாய் பச்சரிசி பாலிற்பொங்கி
மகிழ்வாக யிருவேளை புசித்துக்கொண்டு
இருந்த பால் வெண்ணை பாசிப்பயறும்,
இனிதாகப் பச்சமொன்று முழுங்கிக்கொள்ளே. (3)

சுண்ணவகை களட்ட.

கொள்ளப்பா சுண்ணவகை களட்டிப் போட
குணமான பச்சைமஞ்சள் சமூலம்போட்டு
விள்ளப்பா படிசலத்திற் போட்டுககாய்ச்சி
மெள்ளவே அரைக்காலா யிருத்துக் கொண்டு
எல்லெண்ணெ படியரைக்கால் கூடச்சேர்த்து
இரேகித்து ஐந்துநாள் உண்டுவா நீ
மெள்ளப்பா சுண்ணவகை களன்றுபோகும்
மெய்யாக எண்ணெதனைப்போக்குவாயே. (4)

எண்ணெய் களட்ட.

எண்ணெதனைக் களற்றுதற்கு வகையைக்கேளு
இனிதான சீயக்காய்ப் பொடியினோடே
கன்னயமா யிலுப்பையிலைச் சாறுநாளி
நலமான தாளியிலை சாறுநாளி
சொன்னவகை படிரெண்டும் அருநிரெண்டும்
சொல்முறையாய்ப் படிநாலுந் தாளிசேர்த்து
மன்னவனே எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொண்டு
வடிகட்டி யிருத்ததிற் பூநீருபோடே. (5)

உப்புகளட்ட.

போடுநீ அரைக்களஞ்சி சீனச்சுண்ணம்
போடுவாய் அதைக்களக்கி கலந்துஉண்ணு
கூடுநீ மூன்றுநாளுண்டா லெண்ணெ
கொடுஞ்சுறுககாய்க் களறுமடா யெண்ணெபோச்சு
தேடுவாயுப்பை நீ களற்றிப்போடச்
செப்புகிறேன் கரிசாலைச் சாறுவாங்கி
நாடுவாய் கால்படிச்சா ரெடுத்துக்கொண்டு
நன்றாகக் கற்றாழை விழுதிடித்தே. (6)

மதுரங் களட்ட.

இடித்தசார் காற்படிதா னளவெடுத்து
இரண்டையுமே வாலையிலிட்டு மூன்றுநாட்கொள்
துடித்துடலில் ஊறுகின்ற உப்புப்போச்சு
சுகமான மதுரமது களற்றக் கேளு
கடித்தமிகு சாரமுள்ள கள்ளுகால்தான
நலலாவின் நெய்யதுவு கூடச்சேர்த்து
மடித்துவிடப் பருத்திவிரைப் பருப்புமொன்று
வகைதாக்கிடைந்து நீ கூடச்சேரே. (7)

புளிப்புக் களட்ட.

சேத்துண்ண ரசனையது களரும்பாரு
　　திடமான புளிக்களட்ட வகையைக்கேளு
மாத்தில்லா புளிதயோட்டைச் சுட்டுசாம்பல்
　　வகையாகச் சலங்கலந்து தெளிந்த தண்ணீர்
போற்றியே கால்படிதான் அருந்துவாய்நீ
　　புண்ணியனே மூன்றுநாள் புளிப்புப்போச்சு
கூத்தனுமே உன்னிடத்திலணுகமாட்டான்
　　குணமாக உன்தேகம் காநதியாமே. (8)

நரைதிரைமார.

காந்தமா பிருகளஞ்சி களஞ்சிதங்கம்
　　கருத்துடனே நாகமொரு களஞ்சிசேரு
சாந்தமாமூன்று மொன்றாய் உருக்கிவாங்கி
　　தயவுடனே களஞ்சிரசங் கூடச்சேர்த்து
ஏந்தியிந்தக்களஞ்சி ஐந்துங்குளிக் கல்லிட்டு
　　இனிதான சரிகெந்தி கூடச்சேர்த்து
ஆய்ந்தபுகள் பொற்கையான் சாருவிட்டு
　　அறுசாம மரைத்து அதை நிழலுலர்த்தே (9)

நிழலுலர்த்தி குப்பியிலே அடைத்துவைத்து
　　நீயேனு சீலைசெய்து வாலுகையிலேத்தி
வழமாகக் கமலம்போல் சாமமாறு
　　வயிரவனைப் பூசைசெய்து எரித்துமேபூங்
குழலாளைப் பூசைசெய்து செந்தூரத்தை
　　குன்றியிடை தேனிலுண்ண நரைதிரைபோம்
பழுத்ததுவுங் காயாகும் பிஞ்சுமாகும்
　　பலநினைவு தள்ளியப்பா உண்டுதேரே. (10)

உண்டுவிடு கற்பமிது மற்றோர்பாகம்
　　ஒருகளஞ்சி தங்கமப்பா யீயம்ரெண்டு
மண்டலத்தில் நாகமொரு களஞ்சிதூக்கி
　　வளமாக உருக்கியதை குளிக்கல்லிட்டு
அண்டர்புகழ் ரசமூமொரு களஞ்சிசேர்த்து
　　அரைத்திடுவாய் சரிகெந்தி மல்லிச்சாற்றால்
கண்டாயே நாகமல்லிச் சாற்றாலாட்டி
　　காற்றுட நிழலுலத்திக் குப்பிக்கேற்றே. (11)

குப்பிக்குச் சீலைசெய்து வாலுகையிலேந்தி
குணமாகத் தாயாரைப் பூசைபண்ணி
மெய்ப்புடைய வைரவனைத் தியானஞ்செய்து
விநாயகனைப் பூசைபண்ணி சாமமாறு
தப்பாமல் கமலம்போ லெரித்துவாங்கி
தணலாரச் செந்தூரம் முருக்கம்பூப்போல்
நப்பாக மூன்றரைப்புச் சாமமாறு
நன்றாகக் குன்றியிடை நெய்யிலுண்ணே. (12)

உண்ணவே நரைதிரையு மாறிப்போச்சு
ஒருகோடி சதிர்யுகமு மிருக்குந்தேகம்
மண்ணவே உன்தேகங் காந்திமீரும்
மலசலமும் உமிள்நீரால் லோகந்தங்கம்
கண்ணப்பா பவளம்போற் சிவந்துபோகும்
காலில்லை கயிலாசதேகமாச்சு
விண்ணிலே நட்சத்திரம் பகலிற்காணும்
யேதாந்த சித்தாந்தம் தோணும்பாரே. (13)

தோணவே பூரகச் செம்பைவாங்கி
சுகமாகச் சரியிடையாய்த் தங்கஞ்சேர்த்து
காணவே நாகமொரு களஞ்சிசேரு
கலங்காதே களஞ்சிரசங் குளிக்கல்லிட்டு
கோணாதே சரிகெந்தி சுரோணிதத்தாலாட்டி
குணமாக நிழலுலர்த்திக் குப்பிக்கேற்றி
நாணாமல ஏப்பேற்றி பணிரெண்டுசாமம்
நன்றாகக் கமலம்போ லெரித்துவாங்கே. (14)

வாங்குவாய் விநாயகனைப் பூசைபண்ணி
மனதொன்றாய்ச் செந்தூரங் குன்றியுண்ணு
ஏங்கியே அலையாதே சுருக்கரையி லுண்ணு
இருக்கலாம் வெகுகோடி யுகங்கள்தானும்
தாங்கியதோர் கற்பம்நூற்றைம் பதும்பார்
சரியான கற்பமுறை நூறும்பாரு
மாங்கிஷமாந் கற்பமென்ற வெள்ளைக்கோழி
விகையான கருங்கோழி சாவல்பேடே. (15)

பேடானதென்று சொல்லுங் கோழிமுட்டை
பிரக்கியே கெருடனிட சாற்றிலவெந்து
நாடவே அண்டந்தான் தினமுமொன்று
நலமாக மண்டலமே யுண்டுதேறு
வாடவே வேண்டாங்காண் நரைதிரையும்போசசு
மகாகோடி சதுர்யுகமு மிருந்துந்தேகம்
தேடாமற் பாடிவைத்தேனேழாங் காண்டம்
தெளிவாகப் பதினாறுபாடல் முற்றே (16)

ஏழாவதுகாண்டம்

முற்றிற்று.



இந்த ஏழாவது காண்டத்தில் கற்பமூலிகைகளையும் அறுசுவைகளட்டும் வகைகளையுஞ் சொல்லப்பெற்றது, இனி எட்டாவது காண்டத்தில் யோகஞானமுறைகளை சொல்லுவது காண்க.



உ

பராபதி துணை.

# அகஸ்தியர் பன்னிரு காண்ட

# வைத்தியம்.

## எட்டாவது யோகஞான காண்டம் - 16

தெளிவான ஞானத்திற் காதிகாப்பு
சிற்றின்பம் பேரின்பஞ் சிவனுஞ்சத்தி
அழியாத சிவனும் வெள்ளைசிவப்பு சததி
அண்டமது பராபரனு மிரதுபாரு
வளியான பிண்டமது சததியப்பா
மறைவுண்டு அடக்கிவிடு வெளிவிடாதே
ஒழியாத ஞானத்தை விரும்புவோர்க்கு
உண்மையுடன் அரன்வடிவை யுரைக்கக்கேளே. (1)

கேளப்பா முட்டையது ஈரமுமாகும்
கிருபையுடன் உள்க்கருவோ சிவனுஞ்சத்தி
வாளப்பா விதையறிந்தோன் ஞானிஞானி
வகையறிந்த ஞானியென்றால் பெருமைமெத்த
மீளப்பா கேள்ப்பவர்க்கு ஞானமெய்தும்
வீண்பேச்சு மூடருக்கு ஞானமேது
ஆளப்பா பேரின்பம் அறிவதேது
அழிந்தழிந்து பிறப்பதுவும் இன்பந்தானே. (2)

இன்பந்தான் ஞானத்துக் கேகுமார்க்கம்
இறப்பில்லை பிறப்பில்லை ஈசனாகும்
துன்பந்தா னில்லையப்பா துயரமில்லை
துக்கமில்லை பக்கமில்லை தோழனில்லை
அன்பான ஒருவர்மேற் சிந்தையில்லை
அன்னைபிதா தெய்வமல்லால் வேறேயில்லை
வன்மந்த ரனவர்மனது அறிந்தோரில்லை
மாநிலத்திற் கோடியொன்று வருவார்பாரே. (3)

வருவாரே பெண்மீதில் நினைவுமில்லை
வந்தாலுந் தாயென்று வணங்கிநிற்பார்
மருவாரே திருப்பதியை வணங்கமாட்டார்
மன்னவரைக் கையெடுத்து வணங்கமாட்டார்
திருவான சிவன்பாதனு சிந்தைசெய்வார்
சிறப்பான உலகத்தில் விருப்பங்கொள்ளார்
பொருளான பொருளறிந்து மனதில்வைப்பார்
புதுமைகண்டோ மென்றுமவர் சொல்லார்பாரே. (4)

சொல்லாரே ஞானவெண்பா நூற்றெடுந்த
சூஸ்திரத்தை யடக்கிவைத்துக் காணேனென்பார்
கல்லான தவர்மனது ஒருக்காலுந்தான்
காணேனென்று பொய்ச்சத்தியஞ் செய்தேசொல்வார்
நல்லோர்க ளறுபத்து நாலுகோடி
நல்முனிவ ரிஷிகள்சித்தர் சாஸ்திரமெல்லாம்
வெல்லுமென சூஸ்திரம்பன்னிரு காண்டங் காண்டம்
விரிவில்லை நூற்றித்தொண் ணூறறிரண்டுந்தானே. (5)

தானேகேள் பதினெண்பேர் சித்தர்சொன்ன
சகலசாஸ் திரங்கள்தனி லெதைச்செய்தாலும்
தானேகேள் சாபமது நீர்க்கவேணும்
சாற்றினேன் சாபங்கள் தீராவிட்டால்
தானேகேள் தவங்களுடனெல்லாம போச்சு
சட்டைமுனி செய்திகண்டு மறைத்துக்கொண்டார்
தானேகேள் போகருமே உழவுகண்டு
சரிசெய்தார் நூல்தனைத்தவமுள்ளோனே. (6)

தவமுள்ளோ னுக்காற் கிடைக்கும்பாரு
தானடக்கி அறுசுவையுங் களற்றுவான்காண்
சிவமுள்ளோ னுக்கால் செந்தூரமுண்பான்
தேடிவைப்பான் விட்டகுறைக் காரனுவான்
கவனமதில் வைபான்காண் நாட்டைத்தேடான்
கண்டவர்க்குப் பயித்தியங்கள் கொண்டோனென்பான்
புவனமதி லவர்களெல்லாம் பெரியோரப்பா
புண்ணியவா னொருவரையுந் தேடான்பாரே

தேட்டமல் ரேசித்துப் பூரித்தேதான்
    திரமாகக்கும் பித்து இருநேரந்தான்
வாடாம லிருந்திடுவான் மவுனிபோலே
    மானிடரைக் கனவிலுமே மனதிற்கொள்ளான்
நாடாண்டோ ராறுமடுத்து நில்லான்
    நல்மொழியாய்ப் பேசியடிபணிந்து நிற்பான்
சூடான வார்த்தைகளைப் புகழுமாட்டான்
    சுத்தரமே உண்மையொரு ஞானஞ்சொல்லான். (8)

ஒருநாளு மறியாத மூடச்சாதி
    உலுத்தருட சிறறினப வகையைக்கேளு
கருவான சாஸ்திரத்தைத தேடிவைத்து
    கண்டமென்று தாராளமாகச் சொல்லான்
மருவுவான் அடிபணிவான் பெரியோரென்பான்
    மையென பரமெய்யென் பான்பலியாதப்பா
குருவென்பான நானென்பான் தீட்சைகாணான்
    குருடனப்பா அவனபேச்சை நம்பிடாதே. (9)

பேச்சப்பா சடைவளர்த்துக் காவிபூண்டு
    பூணூல்கள் குண்டலமும் புலித்தோல்கொண்டு
வாச்சப்பா பொட்டணமும் யேடுமொன்று
    மாதிரைக்கோல் ஏகதியெங்கும் நீருசாத்தி
சூச்சமொன்று இருக்குதென்பான் மனுடர்தன்னை
    சொலலாமல் மயக்கிவிழப் பண்ணிக்கொள்வான்
ஆச்சப்பா பணங்காசு வாங்கிகொண்டு
    அருதலிபோ லிரவுதனில் மறைவான்பாரே. (10)

பாரப்பா இப்படியே வெகுபேர்தானும்
    பண்பாக வேடமது பூண்டுகொண்டு
ஊரப்பா திரிவார்கள் சித்தனென்று
    உரைப்ப தல்லால் வேறொன்று மில்லையப்பா
சேரப்பா வாதமது செய்வேனென்று
    செகமெய்க்க அரிதாரஞ் செம்பில்வைத்து
நீரப்பா அதனைஒரு புடமாய்ப்போட்டு
    நிமிஷத்தில் பழுத்ததென்று சொல்வான்பாரே. (11)

சொல்லுவான் சோல்றுப்பை தானுமறைந்து
துருசுதுத்தம அரிதார பற்பமெனபார்
மெல்லுவானை வெருவாயை அவல்போட்டாப்போல்
வேறொன்று மில்லைசஞ்சீவி யென்பான்
அல்லலதை நீக்கிவிடுந தாமபூரசுணணம்
அதுதுஷ்ட ரோகத்துக்கு காருமெனபான்
வல்லதொரு மருநதுனக்குத தாரேனெனறு
மயக்கியே காசுபறித துண்பான்மட்டே. (12)

மட்டையென்று லவன்மட்டை யல்லவப்பா
மருந்துதினபோ னவனுககு புததிவேணும்
சட்டையது பணணுமலிருநது விட்டால
தானேதான் சொல்லாம லோடுவானெனபார்
திட்டமுடன் சோறுகறி கொடுத்துவந்தால்
செகத்திலுள்ள போகளையும் மயஙகசசெய்வான்
பட்டமாந தளிர்க்குமோ பேயாபேயா
பாவியிவன் மருநதினால் பலனுண்டாமோ. (13)

உண்டாகும் சிவயோகம் நூற்றைப்பாரு
உறுதிவரும் பாக்கியங்கள் மிகவுணடாகும்
விண்டதொரு கொஙகணரும் கருவூராறும்
வெளியாக நூலதோறும் சொலலிவிட்டான்
கண்டதொரு சட்டைமுனி இருநூறதீட்சை
கருவோடே வெளியாகச சொனன நூலை
அண்டர்களுங் கண்டுதான் மயங்கினார்கள
அதைமூலர் கிழிததெறிநது போட்டாரபாரே. (14)

போட்டதொரு நூலதற்குப் பதிலாய்நானும்
பூவுலகோர் பிழைப்பதறகு தீட்சை நூலை
தேட்டமுடன மனோனமணியாள் தீட்சைநூறும்
சிறப்பான பூசைவிதி இருநூற்சொன்னேன்
நாட்டமுட னதையறிந்து வாசியோகம்
நன்மையுடன் தினந்தோறும் வகையாய்ச்செய்து
பூட்டகத்தை தானறிந்தால் சித்தனாவான்
புகழ்பெற்று வாழ்ந்திடுவான் உலகிற்றானே. (15)

தானேதான் யோகமே தெரியவேணும்
சண்டாள ருறவதனை தள்ளவேணும்
மானனையா ளாசைதனை மறுக்கவேணும்
வையகத்திற் கற்பமது கொள்ளவேணும்
ஆனதொரு ஞானமதை யறியவேணும்
அம்புவியி னாசைதனை யகற்றவேணும்
ஞானமது பெறுவதற்கு எட்டாங்காண்டம்
நன்மையொடு சொன்ன பதினாறுமுற்றே. (16)

எட்டாவது காண்டம்

முற்றிற்று





இந்த எட்டாவது காண்டத்தில் யோகஞான முறைகளைச் சொல்லப்பெற்றது. இனி ஒன்பதாவது காண்டத்தில் தீட்சை முறைகள் சொல்லுவது காண்க.



உ
பரமபதி துணை.

# அகஸ்தியர் பன்னிரு காண்ட
# வைத்தியம்.

## ஒன்பதாவது தீட்சாவிதி காண்டம் 16

தயவாகத் தீட்சைவிதிக் காதிகாப்பு'
    தான்பாட வாராய்ந்து தெளிந்துபார்த்து
செயமான முப்பததிரெண்டு தீட்சை
    சிததிசெய்த பேர்க்கெல்லாம் ஞானசித்தி
சுயமான பாவவினை யற்றுப்போகும
    சோதிசிவ பர்தமதைக் காணலாகும்
நயமாக எந்தனுக்கு உபதேசித்த
    நற்குமரன திருவருளால் தீட்சைகாப்பே (1)

தீட்சை 32.

தீட்சையிலே முதற்றீட்சை சிவதீட்சைதான்
    ஸ்ரீம் அம் ஓம் யென்று லட்சஞ்செபித்து வோதக்
காட்சிபெறத் தேகமெல்லாம் வியர்வைகாணும்
    கணமாய்கை யில்லையடா கண்டுதேறு
ஆச்சுதடா சிவதீட்சை ரெண்டுகேளு
    ஆம் ஓம் ஹ்ரீம் ரீம் யென்று நீயும்
மூச்சடா உள்ளடங்கும் லட்சமோத
    முத்தியுண்டாஞ் சத்தியுண்டாஞ் சித்தியாமே. (2)

சித்தியாஞ் சிவதீட்சை மூன்றுகேளு
    செப்புவேன் குரோம் ஸ்ரீம் ரீம ரீம் நம் யென்றுலட்சம்
பத்தியாய்ச் செய்துவர மோக்ஷமாகும்
    பானுவைப்போற் தேகமெல்லா மொளிவுமாகும்
துத்தியஞ்செய் சிவதீட்சை நாலுகேளு
    துடியுடனே ஸ்ரீங் ரீங் அங் உங் கென்று
முத்திபெற லட்சமுருச் செபித்தார் சிததி
    மோக்ஷமப்பா தேவதைகள் பணியுந்தானே. (3)

பணிந்துதான் சிவதீட்சை அஞ்சாஞ்சேளு
பண்பாக யங் வங் நீஙகென்றுந்தான்
துணிந்தோது லட்சமுரு செபித்தாற்சித்தி
தொண்டுசெய்வார் தேவதைகள் சட்டைகக்கும்
அணிந்துகொள்வாய் சிவதீட்சை ஆறாஞ்சேளு
அன்புடனே சங் ரங் உம் ஆம யென றுலட்சம்
குனிந்துமிரா தேகமதில் வாசம்வீசும்
குணமாகுந் தேகசித்தி சுருக்குத்தானே. (4)

தானேசெய் சிவதீட்சை ஏழுநீயும்
சந்தோஷமாயோது இங ரங் அவ்வு மென்று லட்சம்
பானேந்து மீஸ்பரனுமருகில் நிற்பார்
வானவர்கள் மகிழ்வாக வாவென்பார்கள்
நானென்ற தீட்சைபெட்டும் உற்றுக்கேளு
நன்றாக மங் நீங் ராரா வென்று லெட்சம்
ஆனந்தமுண்டாகும் தேவர்வந்து
அனபாக உனைச்சேர்ந்து அனைவார்பாரே. (5)

உனைச்சேர்வார் சித்தர்களுஞ் சிவனார்தீட்சை
ஒன்பதுதான வங் கிலியும் சிங அம் ஐம் என்றுலட்சம்
வினையொழிந்து உன்தேகங் கல்போலாகும்
மெய்யான சட்டையொன்று தள்ளிப்போடும்
தினந்துதிக்குஞ் சிவதீட்சை பதனைத்தானுஞ்
செப்பார்கள் செப்புகிறேன் வம் வும் அம இம் யென்று
எனைப்போலே சொல்லார்கள் தேகம்பொன்னும்
இனிதான சிவதீட்சை ஓதினேனே. (6)

ஓதியதோர் சிவதீட்சை பதினொன்றுந்தான்
உரைக்கிறேன் மங் நீங் நீங் கென்று லட்சம்
பாதிமதி சடைக்கணிந்த சிவனார்பாதம்
பணிந்துதொண்டனு யிருப்பாய் செய்துபாரு
நீதிபெறும் பன்னிரண்டாஞ் சததீட்சை
நிலைத்தவர்க்குத்தற்புருஷம் வம் ஆம் ஈம் என்றுலட்சம்
சாதித்துச் செபித்திடவே சித்தியாகும்
சட்டையொன்று தள்ளுமடா கெவுனமாமே. (7)

ஆமப்பா சத்தி பதிமூன்றாந் தீட்சை
அறிவுடனே ஊம் ஆம வென்றேலட்சம்
நாமப்பா செபிதத்திடவே வச்சிரதேகம்
நமனுமிவன் கிட்டவந்தா அணுகான்பாரு
ஊமப்பா பதினாலாஞ் சத்தி தீட்சை
உண்மையாம நம் ரம் ஸ்ரீம் அவ்வு மென்று
தாமப்பா லட்சமுரு செபித்தாற்சித்தி
சாயுட்சிய பதம்பெறுவார் சார்ந்துகேளே. (8)

சார்ந்துகேள் பதினைந்தாஞ் சத்திதீட்சை
தயவாக ஸ்ரீம் ரீம் ரீம் ஓம் மென்று லட்சம்
தேர்ந்துபார் தேகமுந்தான் கலபோலாகும
சிவசிவா நாதவிந்து கட்டிப்போகும
ஆய்ந்தவர்க்குப் பதினாறாந் தீட்சைகேளு
அப்பனே சங் இங் றங் கென்றே லட்சம்
மாந்தளிர்போல் தேகமுள்ள மனோன்மணியாள்
வருவாளே மகனென்று பணிந்துகொள்ளே. (9)

வாய்ப்பான பதினேழாஞ் சத்திதீட்சை
வழுத்துவேன் றீங் றீங் ஸ்ரீம் ஸ்ரீம் என்றே லெட்சம்
காய்ப்பான நரைதிரையு மிலலையில்லை
கற்பமதை யுண்டிடவே சுருக்குமெத்த
ஏய்ப்பார்கள் ஏய்ப்புக்குள் ளகப்படாதே
ஈஸ்பரியாள் தீட்சைபதி னெட்டுங்கேளு
தீய்ப்பான சங் சிங் ரா ரா வென்று
செபித்திடநீ லட்சமுரு சட்டைபோமே. (10)

சட்டைதள்ளும் பத்தொன்பதாந் தீட்சைதன்னை
தான்கேளு திரிநேத்திராயா வாவா வென்று
இட்டமுடன் லட்சமுரு செபித்தாற்சித்தி
இருபதாந் தீட்சையது ஸ்ரீங்கார தேவாய நம:வென்று
தொட்டதுவே லட்சத்திற் சித்தியாகும்
சொல்லுவேன் மூவேழு தீட்சைகேளு
அட்டதிசை வெல்லுமடா இங் அங் றங் கென்றுந்தான்
ஐயான்கு தீட்சைரெண்டும் அறையக்கேளே (11)

அறையக்கேள் அரி அரிஓம் என்றுவோத
அப்பனே லட்சத்திற் சித்தியாகும்
முறையாக இருபததிமூன்றாந் தீட்சை
மொழிந்திடுவாய் ராராரா றீம் றீம் மென்று
குறையாமற் செய்துவிடு சித்தியாகும
குணமாக மூவெட்டுத் திட்சைகேளு
மறைவாக லீலீ லி அரஹர றீறீ றி யென்று
வாழ்த்துவாய் லட்சமுரு கெவுனிப்பாயே. (12)

கெவுனமது ஓடவென்றால் ஐயைந்துதீட்சை
கேளுநீ ஏஏஏ ஊஊஊ வென்றுலட்சம்
மவுனமது சித்தியப்பா மிருபத்தாறில்
மாதாவின் தீட்சையது இஷாய இஷாய ஓம் மென்று லட்சம்
சிவனுரு மிருபததேழ் திட்சைதனனில்
செப்புவேன் ஓம் சிவாய சிவா றீங் கென்றுலட்சம்
புவனமதி லிருபததி யெட்டாநதீட்சை
பூரிப்பாய் சிவஓம் சிவாயநம வென்னப்புகழூண்டாமே(13)

புகழுண்டாம் இருபத்தி லொன்பதாந் தீட்சை
போற்றுவாய் சவ்வும் மவ்வும் மென்று லட்சம்
கெகிளாது அய்யாரு தீட்சையப்பா
நிலைத்தவர்க்கு மங் சங் கங் கென்று லட்சம்
அகமகிழ உன்தேகம் ஒருநாளுநதான்
அழியாது நரைதிரையு மிலலையில்லை
உகம்வரைக்கு மிருந்துமடா முப்பதநொன்று
ஓதுவாய் ஸ்ரீங் றீங் கென்று தானே. (14)

என்றுதான் லட்சமுரு செபித்தாற்சித்தி
இறவாமலிருந்துமடா கோடிகாலம்
நன்றுகாண் முப்பததிரெண்டாந் தீட்சை
நங் கிலி சிங் கிலி யென்றே லட்சம்
மன்றுள்ள காலம்வரை இருந்துந்தேகம்
வாழ்த்திநீ தோததிரங்கள் செய்துகொள்வாய்
கொன்றாலும் வாள்கொண்டு வெட்டினாலும்
குறையாமல் வாள்வெட்டுப் பொருந்துந்தானே. (15)

பொருந்துமே வயணமது தீட்சையோதப்
    புகலுவேன் கங் கங் கணபதி சர்வ சூரிய நமாவென்று
இருந்து லட்சமுரு செபிக்க ஈசனுவாய்
    இயல் மனோன்மணி தீட்சை நூறும்பாரு
வருந்தியே யிதுமுப்பத்தி ரண்டுதீட்சை
    மனிதரவர் செய்வாரோ மகானகள் செய்வார்
அருந்துவாய் பெண்ணமிர்தம் உண்டுதேறு
    அன்பான தீட்சைபதினாறு முற்றே. (16)

ஒன்பதாவது காண்டம்

முற்றிற்று.





இந்த ஒன்பதாவது காண்டத்தில் தீட்சைவிதிகளைச் சொல்லப்பெற்றது. இனி பத்தாவது காண்டத்திற் சாபநிவர்த்தி சொல்லுவது காண்க.



உ

பரமபதி துணை.

# அகஸ்தியர் பன்னிருகாண்ட

# வைத்தியம்.



## பத்தாவது சாபநிவர்த்தி காண்டம் -16

ஆந்தரிகமான மனோன்மணியே காப்பு
அன்பாக செந்தூர சுண்ணஞ்செய்து
சாந்தமாய்க் கற்பமுண்ண சரீரந்தங்கம்
தயிலமுதற் பாஷாண மருந்துக்கெல்லாம்
பாந்தமாய்ச் சாபமது தீர்க்கவேணும்
பக்குவமாய்ச் சாபமது நிவர்ததி செய்ய
மாந்தரிக பீஜத்தை இதிலே சொன்னேன்
வகையோடே மந்திரத்தை உருததான்போடே (1)

நவக்கிரக சாப நிவர்த்தி

உருவாகச் சித்திசெய்வாய் அருக்கன்சாபம்
உததமனே-அம்-ஹ்ரீம்-யென்று லட்சம்
திருவாகச் செபிததுவர சாபந்தீரும்
ஜெயம்பெற்ற சந்திரனார் சாபந்தீர
அருவாக ஹ்ரீம்-உறீம்-யெனறு லட்சம்
அனபாகச் செபித்துவரச் சாபந்தீரும்
திருவாகமான செவவாய சாபநதீர
ஸ்ரீம் றீங நசி மசி யென்று லட்சம்போடே (2)

என்றுநீ புதன்சாபம் தீரக்கேளு
இன்பமுடன் வங யங நசி மசி யென்று லட்சம்
நன்றுஉருச் செபிததிடவே சாபந்தீரும்
நாட்டமுள்ள குருசாபந் தீரக்கேளு
அன்றுநீ ஸ்ரீம் றீம் நசி மசி யென்று லட்சம்
அன்பாகச் செய்தாக்கால் சாபந்தீரும்
இன்றுநீ சுக்கிரன்றன் சாபங் கேளு
இ றீம் றீம் நசி மசி யென்றே போடே (௩)

போடுவாய் சனியகவான் சாபம்போக
புகழாக ஸ்ரீம் றாம் றாம் யென்றுசொல்லி
தேடுவாய் லட்சமுருப் போடத்தீரும்
திறமான இராகுவுட சாபந்தீர்க்க
நாடுவாய் அரீம் ஸ்ரீம் நசிமசி யென்றுலட்சம்
நலமாகச் செய்துவரச் சாபநீரும
சாடுவாய் கேதுவுட சாபநீர்க்க
சரியாக அங் சிங் நசிமசி யென்றுலட்சம்
நீடுவாய் குளிகனுட சாபதீர்க்க
நிட்சயமாய் ஓம்ஐயும ஐயு மெனதீர்ந்துபோமே. (4)

தீாந்துவிடும் உடல்சாப மிதுதானப்பா
சித்தாகள்தம சாபமதீ அரிஹரிஓம் சித்ததேவா நசிமசி யென்று
ஓர்ந்துமே லட்சமுருச் செபிககதீரும்
ஒன்பான நவசித்தர் சாபந்தீர
ஆர்ந்துசெய் ஆஆ ஈஈ ஊஊ எஏ ஐஐ யென்று
அருமையுட னுருலட்சஞ செபிக்கத்தீரும்
தேர்ந்துகரை யேறுதற்கு மநதிரஞ்சொன்னேன்
சிறப்பாகச் செபிததாக்காற் சிததியாமே. (5)

சித்தியாம் மூலிகையைப் பறிக்குமுன்னே
சிறப்பாகச் செடிமுன்னே நின்றுகொண்டு
பத்தியுடன் ஓம்மூலி சர்வமூலி உயிர்மூலி
பரிவாயுன்னுயிர் உடலில்நிற்க சுவாகாவென்று
நத்தியே பதினெந்து உருவேபோட
நலமானசாப விமோட்சனந் தானாகும்
பத்தியுடன் பாஷாண சுண்ணச்செந்தூரம்
பாங்காகப் புடமிடுமுன் சாபங்கேளே. (6)

கேளப்பா பாஷாண சாபந்தீர
கிருபையுடன் ஓம் ஹ்றீம் நசிமசி யென்று
யாளப்பா ஆயிரதெட்டுருச் செபிக்க
வலியான பாஷாண சாபந்தீரும்
கோளப்பா ஒன்றுமில்லை உப்பினசாபங்
குறிப்பாக ஹரிஓம் றீம் நசிநசி யென்று
நாளப்பா நூத்தியெட்டு உருப்போடத்தான்
நாடாது சாபமெல்லாம விலகிப்போமே. (7)

போமேதான் உபரசத்தின் சத்தைச்சேர்த்துப்
புகழான ரசவாதஞ்செய்யும்போது
ஆமேதான் ஓம் றீம் மசிசசி யென்று
அன்பாக ஆயிரத்தெட்டுருச் செபித்தால்
வாமேதான் உபரசத்தின சாபம்போச்சு
மகிழ்வாக போகமது புரியவெண்ணில்
தாமமுடன் வங் யங் நங் மங் சிங் நசிநசி யென்றாலட்சம்
தான்செபிக்கச் சாபம்போம் சூஸ்திரம்பாரே. (8)

சூஸ்திரமாம் பன்னிரண்டு காண்டமப்பா
சுருக்கமாய்ப் பதினாறு பதினாறாக
நேத்திரம்போல் வைத்தியங்கள் பதினாறாகும்
நிலைத்ததொரு வாதவிதத்தை பதினாறாகும்
நீத்தினமாம் சுண்ணமது பதினாறாகும்
நேர்மையுள்ள செந்தூரம் பதினாறாகும்
சாத்திகமாம் பற்பமுறை பதினாறாகும்
தைலமுறை யற்புதமாம் பதினாறாமே. (9)

ஆமேதான் கற்பமுறை பதினாறாகும்
அடையோக ஞானமது பதினாறாகும்
தாமேபார் தீட்சைவிதி பதினாறாகும
சாபங்கள் தானிவர்த்தி பதினாறாகும்
நேமமுள்ள ஜாலமது பதினாறாகும்
நியமமுள்ள மாந்திரீகம் பதினாறாகும்
வாமமுள்ள சூஸ்திரங்கள் பன்னிரெண்டும்
மகிழ்வாகக் கிடைத்தாக்கால் சிவன்றான்பாரே. (10)

பாரப்பா சாபமது தீர்க்கவேணும்
பரிவான மூலிகையின் சாபந்தீரும்
காரப்பா சுண்ணசெந்தூர பற்பம்
கற்பமுறை செய்யவென்றால் சாபந்தீரும்
நேரப்பா வாதவிதத்தை வைத்தியங்கள்
நேர்மையுடன் செய்யவென்றால் சாபந்தீரும்
சீரப்பா கற்பங்கள் தைலம் ஜாலம்
தீட்சைகளுஞ் செய்யவென்றால் சாபந்தீரே. (11)

தீரேநீ ஜாலமுடன் மாந்திரீகம்
செய்வதற்கு முனிசாபந் தீரவேணும்
நேரேநீ யோகஞானங்கள் செய்ய
நேர்மையுடன் சாபமது தீர்க்கவேணும்
பாரேநீ எம்மருந்து முடித்திட்டாலும்
பார்வதியாள் வயிரவன்றன் பூஜைவேணும்
காரேநீ விரதமதை விட்டிடாதே
கண்மணியே சாபமதை நிவர்த்திசெய்யே. (12)

செய்யவே விட்டகுறை யிருக்கும்போது
தீர்க்கமுடன உடல்சாபம் நிவர்த்திசெய்தால்
ஐயமுள்ள மூலிகைகள் கண்ணிற்காணும்
அப்போது ரசவாதம் பலிதமாகும்
பொய்யல்ல உடற்சாபந் தீராமற்றான்
போய்த்தேடித் திரிந்தாலுங் கண்ணிற்காணு
மெய்யாகக் கண்டிட்டோ மென்றுசொல்வார்
வீணிலவர் பேச்சைநம்பி யலைந்திடாதே. (13)

நம்பியிந்த சூஸ்திரத்தை யடக்கிவைத்து
நன்றான தண்டகமாம் நூற்றைப்பாரு
நம்பிநீ சிவப்புநிறச் சனிகைபார்த்து
நன்மையுடன் நீவணங்கிப் பூஜைசெய்து
நம்பியே கொண்டுவந்து இல்லம்வைத்து
நல்லதொரு கற்பூரச் சுண்ணந்தன்னை
நம்பியே சனிகைக்கு உள்ளேயேத்த
நயமான அமுர்தமங்கே யிறங்கும்பாரே. (14)

இறங்கினதைப் பீங்கானி லேந்திவாங்கி
இனிதான கற்பூரச் சுண்ணம்போடு
உறங்காமற் பனிநீர்போல் தெளிந்துநிற்கும்
உத்தமனே குப்பியிலே யடைத்துக் கொண்டு
திறங்காணுந் தேவிமனோன்மணியின்முன்னே
சிந்தைமகிழ்வாக வைத்துப் பூஜைபண்ண
அறங்காக்கு மீஸ்வரியா ளொடுத்துஉன்னை
அணைத்தமுது தந்திடுவாள் வாங்குவாயே. (15)

வாங்கிநீ உண்டிடுவாய் அமுதகற்பம்
மைந்தனே தேகம்பொன் ளுகும்பாரு
ஏங்கிநீ யலையாதே யநேகசித்தர்
எடுத்தவித்தை பலியாத தேதஞலே
ஓங்கியதோ ரமுதமது புசிக்காமற்றுன்
உண்மையுடன் தான்புசித்தார் போகநாதர்
தாங்கியே சொன்னபடி செய்தாற்சித்தி
சாபந்தான் தீர்த்த பதிறுறு முற்றே. (16)

பத்தாவது காண்டம்

முற்றிற்று.





இந்த பத்தாவது காண்டத்தில் சாபநிவர்த்தி முறைகளைச் சொல்லப் பெற்றது. இனி பதினோராவது காண்டத்தில் ஜாலங்களும் வைத்தியங்களும் சொல்லுவது காண்க.

பரமபதி துணை.

# அகஸ்தியர் பன்னிரு காண்ட
# வைத்தியம்.

## பதினோராவது ஜாலகாண்டம் - 16

ஆதிமூலத் துதித்த ஐங்கரனே காப்பு
ஐந்தெழுத்து மெட்டெழுத்து மனுதிகாப்பு
ஜோதிசிவ னருகில்வளர் ஆத்தாள்காப்பு
சொற்பெரிய நாதாக்கள் சுருதிகாப்பு
நீதிபெறு மண்டபிண்டம் நிறைநதேர்ன்காப்பு
நிமலகுரு பிரணவ குமரன்காப்பு
பாதிமதி சடைக்கணிந்த சிவனார்காப்பு
பாடினேன் சாஸ்திரங்கள் கோடாகோடி (1)

கோடான கோடிசாஸ் திரங்களுக்கும்
குருமுறையை யிதிலேதான சொல்லிவிட்டேன்
சோடாக ஆயிரத்தி இருநூறப்பா
சொல்லினேன் ஜாலகாண்டம் இரண்டுநூல்கள்
ஆடவர்க ளறியாது மறைத்துவைத்தேன்
அன்பான ஜாலமப்பா வசியமாகும்
நீடான வேசரிதான் பேடும்அன்றில்
நேசித்து இறங்கையிலே அருவிபோலே (2).

அருவியது விழுகுமடா மோருபோலே
அதைப்பீங்கான் தனில்வாங்கி வைத்துக்கொண்டு
குருவான ஈப்புலியும் ஈயும்போட்டு
கூடவே ஐவிரலிச் சாறும்விட்டு
திருவாக மத்திகக மெழுகுமாகும
திகைப்பூடு சுழல்வண்டு மின்மினியும்
அருவுருவா யஞ்சாறு கூடச்சேர்த்து
ஆடையொட்டி நிலப்பனை விளாவுஞ்சேரே. (3)

சேர்த்தப்பா ஒன்றாக அரைத்தெடுத்து
குமிழில்வைத்து வேர்க்காமல் காற்றாடாமல்
சாத்தியமாய் மோகினியை லட்சமுருவோதி
சனிகைக்கு தினியிலே கூடச்சேரு
பார்த்திபனே திலதமிட்டு மேலேபூசிப்
பண்பாகத் தியாணிக்கச் சனிகைதானும்
ஆர்த்தியுடன் சொன்னபடி தானும்கேட்கும்
அப்பனே சொல்லிவிட்டே னினிதாய்க்கேளே. (4)

கேளுநீ எலுமிச்சை முருங்கைதேக்கு
கிருபையுடன் அவுரிமருதோன்றிநாவல்
வாளுநீ செவ்வகத்தி மஞ்சணத்தி
வளர்வேங்கை வகைப்பட்டை வகையாய்ச்சுட்டு
ஆளுநீ பனிநீரிற் கரைத்துக்காய்ச்சி
அப்பனே இதிலிருந் துப்பெடுத்து
மீளுநீ கரியுப்பு உவரினுப்பு
வெடியுப்பு அமுலுப்பு கல்லுமுப்பே (5)

கல்லுப்பு வலையலுப்பு யிந்துப்புத்தான்
கருத்துடனே அமுரியுப்பு சவுட்டினுப்பு
வெல்லுமே உப்புவகை ஒன்பதாகும்
வீரமுடன் பூரமொடு காரசாரம்
வல்லவனே அரிதாரம் லிங்கஞ்சூதம்
மஞ்சளென்ற கெவுரிவெள்ளைப் பாஷாணந்தான்
சொல்லரிய ஒன்பதுந்தா னின்னங்கேளு
ஜோதியாந் தங்கம்வெள்ளி செம்பினோடே. (6)

செம்புடனே வெள்வங்கம் கருவங்கம்நாகம்
திறமான உருக்கிரும்பு காந்தஞ்சேரு
அன்புடனே இதுவெல்லாஞ் சுத்திசெய்து
அறிவாக வகைவகையாய்க் களஞ்சிவீதம்
பண்புடனே களஞ்சிபது முப்பத்தாறும்
பதிவாகச் சேர்த்தெடுத்து வைத்துக்கொண்டு
இன்பமுடன் கெந்தகமுஞ் சரியாய்க்கூட்டி
எடுத்துகுழி க்கல்லதனில் வைத்துக்கொள்ளே. (7)

வைத்திடுவாய் குயப்பாலிற் சாமமொன்று
வகையுடனே பழச்சாறு சாமமொன்று
சித்தமதாய்க் கற்ருலம் பாலிற்சாமம்
சீரான எருக்கம்பால் தன்னிற்சாமம்
வைததிடவே வெடியுப்புச் செயநீர்சாமம்
வளமான பொற்கையான் சாறறிற்சாமம்
சுத்தமாம் வேங்கையுப்புச் செயநீர்சாமம்
சுகமான பன்னீரில் சாமமொனறே. (8)

ஒன்ரு்ன சவ்வீரச் செயநீர்சாமம்
ஒன்பதுநீர் ஒன்பதுதான் சாமமாட்டி
நன்ருக வில்லைதட்டிக் காயவைதது
நாலுநாள் தானுலர்ததிச் சட்டிக்குள்ளே
குன்ருமல் வைத்துநீ ஒடுமூடி
குணமாக அஞ்சுசுண்ண மண்ணுஞ்சேர்த்
நன்ருன ஆகாசத்தாள் சேர்ததரட்டி
நலம்பெறவே சீலைமண்ணுந் தானேசெய்யே. (9)

செய்யவே ஆத்தாளைப் பூஜைபண்ணித்
திடமாக வயிரவனைத் தியானஞ்செய்வாய்
கைமுறையா யாவரையின் விறகுனாலே
கமலம்போ லெரித்திடுவாய் ஆறுசாமம்
பொய்யாது செந்தூரம் முருக்கம் பூப்போல்
பூஜைசெய்து தானெடுத்து வைத்துக்கொள்ளு
மெய்யான செந்தூரம் நோய்க்கெல்லாந்தான்
விபரமாய்ச் சொல்லுகிறே னறிந்துபாரே. (10)

பாரப்பா வாதத்தி லெழுந்தநோய்க்கு
பரிவான அனுப்பானஞ் சொல்லக்கேளு
பாரப்பா வேப்பெண்ணெய் பணவிடையிற்கொள்ளு
பத்தியங்கள் நினைவாகக் காத்தேயுண்ணப்
பாரப்பா சூலைபதி னெட்டுந்தீரும்
பரிசுகெட்ட கால்கைகள் முடக்குந்தீரும்
பாரப்பா மேல்நடுக்கந் தலைநடுக்கம்
பண்பான கைநடுக்கம் பறந்துபோமே. (11)

போமப்பா பித்தத்தி லெழுந்தநோய்க்கு
புகழிஞ்சிச் சாற்றினிலே பணவிடைமேதாக்கு
ஆமப்பா பாண்டுவகை யெட்டுந்தீரும்
அதினுடைய வாயுவெல்லா மற்றுப்போகும்
போமப்பா குட்டம்பதி னெட்டுந்தீரும்
புத்துகளும் பித்தமெலாம் பொடிந்துபோகும்
நாமப்பா மூலமுளை யாணிதீரும்
நாசிபபிணி சந்தனக்கு நாட்டிப்பாரே. (12)

நாட்டிலே சிலேற்பனத்தி லெழுந்தநோய்க்கு
நலமான தேனிலுண்ணப் பணவிடைதானப்பா
பூட்டிவைத்த தொண்டையுள்ள கட்டுந்தீரும்
பொல்லாத மயக்கமஞ்சு வலிதானஞ்சு
ஓட்டிவிடப் பைத்தியமும் புலப்பந்தீரும்
உடலிலுள்ள நோயெல்லா மொழிந்துபோகும்
தாட்டிமைகள் பேசாதே தன்மையாகும்
சத்தியமாய்க் கைமுறைகள் தவறிடாதே. (13)

முறைதவறா திருந்துவிடு அரனாணை
முந்திவந்த புததிரற்குச் சொல்லவேணும்
கரைகண்ட மருந்திதுதான் எல்லாநோய்க்கும்
கருவான செந்தூரங் கண்டுகொள்ளு
மறைவாக வைத்திருந்து உண்டுவாநீ
வயிரமடா நரைதிரையு மில்லையில்லை
துரையான சாஸ்திரத்துக் கெல்லாமிந்த
சூஸ்திரத்தி லடக்கிவைத்தேன் தேறுவாயே. (14)

தேறுவாய் அறுசுவையுந் தள்ளிப்போடு
திறமாகச் சாபமதை நீக்கிப்போடு
கூறுவாய் தீட்சையது வகைக்குலட்சம்
குணமாக வோதியே தாயைப்பூசி
மாறுவாய் நாற்பத்தி முக்கோணபூஜை
வகையோடே ஐம்பதினிற் சொன்னேன்பாரு
தேறுவாய் வயிரவனைப் பூஜித்துய்ய
தீராத நோய்தீரும் தீர்க்கந்தானே. (15)

# வைத்திய சாஸ்திர விளம்பரம்.

## இராமதேவர் மக்கத்திற்குச் சென்று யாக்கோப்பெனப் பெயர் பெற்றுச் சொல்லிய வாதவைத்திய சாஸ்திரங்கள்

(1) வைத்திய சிந்தாமணி 700-ம் அதன் சுருக்கமுஞ் சேர்ந்தது இதில் வைத்திய முறைகளும் வாதமுறைகளும் திராவக முறைகளும் சுண்ணசெந்தூர முறைகளுஞ் சொல்லக்கூடியது. விலை 1—0—0

(2) சுண்ணக்காண்டம் 600 இதில் பாஷாணங்களும் உப்புகளுஞ் சுண்ணங்கள் செய்யக்கூடிய முறைகளைச் சொல்லப்பெற்றது. 0—14—0

(3) சுண்ணம் 300 பாஷாணங்களையும் லோகங்களையும் சுண்ணஞ் செய்ய வேண்டிய ரகசியங்களைச் சொல்லக்கூடியது. விலை 0—8—0

(4) சுண்ணம் 155ம் அதன் சூஸ்திரம் 55ம் சேர்ந்தது இதில் சுண்ணஞ் செய்வதற்கு ஆதாரமான கருவிகளும் கைபாகமும் சொல்லக் கூடியது. விலை 0—7—0

(5) செந்தூரம் 300 இதில் பாஷாணங்களையும் லோகங்களையுஞ் செந்தூரஞ் செய்வதற்கு முறைசொல்லக் கூடியது. விலை 0—8—0

(6) செந்தூர சூஸ்திரம் 155ம் அதன் சூஸ்திரம் 50ம் சேர்ந்தது இதில் லோகத்திலுஞ் சரக்குகளிலுஞ் செம்பெடுக்கு முறைகளும் அதில் வாதஞ் செய்யக்கூடிய துறையுஞ் சொல்லியது. விலை 0—7—0

(7) வாதவைத்தியங்கள் 300 இதில் சுண்ணச் செந்தூரஞ் செய்வதற்கு வகாரத்திற்குக்கொண்டு வருவதற்கும் சரக்குகளிலும், லோகங்களிலும் களங்கெடுக்கக்கூடிய முறைகளைச் சொல்லக்கூடியது. 0—8—0

(8) பஞ்சமித்திரம் 300 இதில் வைத்தியங்கள் வாதங்கள் செய்பவர்கள் பாஷாணங்களையும் லோகங்களையும் உப்புகளாற் பஞ்சமித்திரஞ் செய்து சுண்ணசெந்தூரத்திற்கு கொண்டுவரக்கூடிய முறைகளைச்சொல்லக்கூடியது. விலை 0—8—0

(9) வைத்தியவாதசூஸ்திரம் 400 இதில் வாதங்கள் செய்யவேண்டிய முறைகளும் வைத்தியமுறைகளுஞ் சொல்லக்கூடியது. விலை 0—12—0

(10) வைத்தியம் 300 இதில் பாஷாணச்சரக்குகள் விஷச்சரக்குகள் சுத்திசெய்ய வேண்டிய முறையும் நாடிப்பிரமாணமும் வைத்தியத்திற்கனுப்பானங்களும் கஷாயவர்க்கங்களும் சொல்லக்கூடியது. விலை 0—8—0

(11) தண்டகம் 110ம் மேற்சொன்ன பாஷாணங்களுக்கும் லோகங்களுக்கும் இடைபாகம் செய்பாகஞ் சொல்லக்கூடியதும் இடைபாகம் 16ம் செய்பாகம் 16ம் வைத்தியங்களுக்கு சூஸ்திரம் 50தும் ஆகச்சாஸ்திரம் நான்குஞ் சேர்ந்தது. விலை 0—7—0.

(12) வைத்தியக் கல்லாட மூலமும் உரையும் மேற்சொல்லிய சாஸ்திரங்களுக்கெல்லாம் அரும்பத வுரையும் வாத வைத்தியமுறையுஞ் சொல்லக்கூடியது விலை 0—12—0